# மகாத்மா காந்தீ

## நினைவு மாலை

ஸ்ரீமதி
எஸ். அம்புஜம்மாள்

பதிப்பாசிரியர்
பி. ஸ்ரீ






தினமணி வெளியீடு

தினமணி வெளியீடு: 1.                பதிப்பாசிரியர்: பி. ஸ்ரீ.

# மகாத்மா காந்தி நினைவு மாலை



எஸ். அம்புஜம்மாள்



"இருள் அகற்றும்
கைவிளக்கே கற்ற அறிவுடைமை."

தினமணி காரியாலயம்
100, மவுண்டு ரோடு
சென்னை

காபிரைட்]                1944                [விலை அணா 8.

# பொருள் அடக்கம்

# பதிப்புரை

தமிழ் மக்களுக்குத் தாய் மொழி மூலமாக அறிவுச் செல்வங்களை வாரி வாரி வழங்க வேண்டும் என்னும் ஆசையோடு தினமணி வெளியீடு என்ற இந்த முயற்சி ஆரம்பமாகி யிருக்கிறது. இந்த வரிசையில் வரும் புத்தகங்களிலே பொருளின் தகுதிக்கு இசைந்த உருவ அழகும் இயன்றவரையில் அமையவேண்டும் என்பதும் எங்கள் ஆசை. ஆசை பெரிது: ஆற்றல் வாய்ந்த அறிஞர்களும், ஆசிரியர்களும் ஒத்துழைப்பதாக அன்பு கூர்ந்து வாக்களித்திருக்கிறார்கள்.

முதலாவது வெளியீடு "மகாத்மா காந்தி—நினைவு மாலை". சமீபத்திலே விடுதலை பெற்று வந்திருக்கும் நமது தனிப்பெருந் தலைவரான மகாத்மாவுக்கு இந்த வாடாத அன்பு-மலர்கள் தொடுத்த நினைவு மாலையைச் சூட்டி வரவேற்கிறோம்.

இந்த மாலையைத் தொடுத்தவர் "மகாத்மாவின் சுவீகார புத்திரி" என்று சொல்லத் தக்க ஸ்ரீமதி எஸ். அம்புஜம்மாள். இதிலுள்ள சில மலர்கள் முதல் முதல் "குமரிமலரி"லே மலர்ச்சி பெற்றுத் தமிழ் வாசகர்களின் ஹிருதயத்தைப் பெரிதும் கவர்ந்தன. அந்த மலர்களோடு வேறு பல நினைவுமலர்களையும் சேர்த்து ஒரு புதிய மாலையாகவே தொடுத்திருக்கும் இந்த நினைவு மாலையின் அருமை பெருமைகளை வாசகர்களே தெரிந்துகொள்வார்கள்.

*பி. ஸ்ரீ.*
பதிப்பாசிரியர்,
"தினமணி வெளியீடு"

சென்னை,
27—5—'44

## இலக்கிய ஆலோசனையாளர்கள்

ஸ்ரீமதி. எஸ் அம்புஜம்மாள்,
ஆழ்வார்பேட்டை, சென்னை.

திரு. கே. சந்திரசேகரன்,
மயிலாப்பூர், சென்னை.

திரு. ஏ. என். சிவராமன்,
"தினமணி" ஆசிரியர்.

திரு. கே. சுவாமிநாதன்,
ஆங்கிலப் பேராசிரியர்,
ப்ரெஸிடென்ஸி காலெஜ், சென்னை.

திரு. டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி,
நுங்கம்பாக்கம், சென்னை.

திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார்,
சரித்திரப் பேராசிரியர்,
சென்னை யூனிவெர்ஸிடி.

திரு. ஸி. என். முத்துரங்க முதலியார்,
பேட்டை, செங்கற்பட்டு ஜில்லா.

திரு. ஏ. வி. மெய்யப்ப செட்டியார்,
ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், பிரகதி பிக்சர்ஸ்,
சென்னை.

திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை,
தமிழ் ஆராச்சித் துறைத் தலைவர்,
சென்னை யூனிவெர்ஸிடி.

# முன்னுரை

ஆண்மை பெண்மை என்பன பிறப்பில் அமைவனவா? அல்லது பண்பில் அமைவனவா? இதைப் பற்றிய ஆராய்ச்சி ஈண்டு நிகழ்த்த வேண்டுவதில்லை. இரண்டும் பண்பில் அமைவன என்பது அறிஞர்தம் உள்ளக் கிடக்கை.

காந்தி அடிகள் ஆண்மை உடையவரா? பெண்மை உடையவரா? பெண்மை உடையவர் என்னும் நுட்பம் அவரது வாழ்க்கையில் நனி விளங்குகிறது.

பெண்மை பெரிதும் யாண்டு விளங்கும்? அஃது ஈர நெஞ்சில் விளங்குவது இயல்பு.

> **ஈர அன்பினர், யாதும் குறைவிலார்**
> **வீரம் என்னல் விளம்பும் தகையதோ?**
>
> **—சேக்கிழார்.**

ஈர நெஞ்சினின்றும் பிறப்பது வீரம். வீரம் பெண்மைக் கூறு.

காந்தி அடிகள் வீரம் அஹிம்ஸா தர்மத்தை அடிப் படையாகக் கொண்டு அரும்பி மலர்ந்து காய்த்துக் கனிந்து நிற்றல் உலகறிந்த தொன்று. அவ்வீரம் பலரை வீரராக்கியது.

காந்தி அடிகளின் நோக்கால் வீரராகியவருள் ஒருவர் திருமதி எஸ். அம்புஜம்மாள் அவர்கள். அம்புஜம்மாள், பாரத நாட்டு வீரருள் ஒருவராகிய எஸ். ஸ்ரீநிவாஸையங் காரின் அருந்தவப் புதல்வியார். அவ்வம்மையாரின் வீரம், அஹிம்ஸா தர்மப் போரில் அவரை ஈடுபடுத்தி, வாகை மாலை அணிவித்தது நாட்டுக்குத் தெரியும்.

திருமதி அம்புஜம்மாளின் வீரம் பெண்மையினின்றும் பிறந்தது. இவ் வீரத்தை ஓம்பியது காந்தியம். காந்தியத்தால் தாம் பெற்ற பேற்றை அம்மையார் இந் நூல் வாயிலாக வெளியிட்டுள்ளார். இதனினும் சிறந்த நன்றி வேறென்று உண்டுகொல்?

இந் நூல், பெண்மைக்கு ஓர் உறையுள்; வீரத்துக்கு ஒரு வைப்பு; காந்தியத்துக்கு ஓர் ஊற்று. இவ் விழுமிய நூலைத் தமிழ் நாட்டுக்கு உதவிய சகோதரியாருக்கு எனது வாழ்த்து உரியதாக.

தமிழ் நாடு இந் நூலை அன்புடன் ஏற்குமென்று சொல்லவும் வேண்டுமோ?

தமிழ் வாழ்க; காந்தியம் வெல்க.

இராயப்பேட்டை, }
26–5–'44. } திரு. வி. க.

# மகாத்மா காந்தி

# நினைவு மாலை



## 1. முதல் சந்திப்பு

### விசித்திரமான விருந்து

வெந்த மணிலாக் கொட்டை, தேங்காய் வழுக்கல், ஆப்பிள், ஆரஞ்சு முதலிய பழங்கள், திராட்சை, பேரீச்சம் பழம் போன்ற உலர்ந்த பழங்கள், பாதம் பருப்பு முதலிய பருப்பு வகைகள், நீர்மோர், இளநீர், பானகம்—இவை இந்த நாகரிக யுகத்திலே எங்கேயாவது ஒரு தோட்ட விருந்துக்கு ஏற்ற தின்பண்டங்கள் ஆகுமா? ஆனால், அன்று மாலை—என்னவோ—இவைதான் எங்கள் வீட்டிலே தயாரிக்கப்பட்டன. ஜிலேபி, பூந்தி, பேடா, கல்கத்தா சந்தேஷ், காப்பி, டீ, ஐஸ்க்ரீம்—இவைகளை நம்பி வந்த விருந்தினர்கள், மேஜை மீது வெள்ளிக் கோப்பைகளிலும் தட்டுகளிலும் மேலே சொன்ன பொருள்களே நிரம்பி யிருந்ததைக் கண்டு மலைத்துத்தான் போயிருப்பார்கள்.

இன்று மகாத்மா காந்தியின் ஆகார நியமத்தை அறியாதவர் இல்லை. இவர் உண்ணும் உணவு வகைகளைத் தூய உணவு என்றுகூட மதிக்கிறார்கள். இவரை உணவு-முறையில் பின்பற்ற முயல்கிறவர்களும் உண்டு. ஆனால், அன்று எல்லோருக்கும் அது ஒரு விசித்திரக் காட்சியாகத் தான் இருந்தது.

முக்கிய விருந்தாளியான காந்தியும் ஒரு விசித்திர புருஷராகவே பலருக்கும் தென்பட்டார். குஜராத்தித் தலைப்பாகையும் வெள்ளைக் குர்த்தாவும் வேஷ்டியும் அணிந்து ஓர் ஏழையான, படித்த, வட நாட்டுக் குடியானவன் போல் காணப்பட்டார். இவரைப் பார்த்ததும் "விருந்தினருக்கு ஏற்ற விருந்துதான்!" என்று சிலர் எண்ணியிருக்கவும் கூடும்.

## தென் ஆப்பிரிக்காவும் காந்தியடிகளும்

"கார்ராம் பசுவின் வெண்மையான பால் குணமுள்ளது எனப் பாராட்டி யாவரும் பருகுகின்றனர்" என்று ஓரிடத்தில் துளஸீதாசர் சொல்லுகிறார். தோல் கறுப்பானாலும், அதன் பால் வெள்ளைப் பசுவின் பால் போல வெண்மையாகத் தானே யிருக்கிறது? அதற்குக் குணமும் விசேஷமாக இருந்தால் பாராட்ட வேண்டியதுதானே? ஆனால், தங்களைப்போல் கறுப்பு மனிதர்களுக்கும் ஆத்மா உண்டென்றுகூட வெள்ளையர் நம்பி நடப்பதாகத் தெரியவில்லையே! சில குண விசேஷங்களில் கறுப்பர் தங்களுக்கும் மேலானவர்களாயிருக்கலாம் என்பதை எப்படி ஒப்புக் கொள்வார்கள்? நாய் பூனைகளில் கறுப்பு வெளுப்பு என்ற நிறபேதத்தை வைத்து அவர்கள் உயர்வு தாழ்வு கற்பிக்கிறார்களா? எனினும், மிருகங்களிடம் காட்டாத நிறத் துவேஷத்தையும் மனித வர்க்கத்தினிடம் காட்டுகிறார்களே!

சுயநலத்தின் காரணமாக எழுந்த இந்த விபரீத மனப் பான்மையின் விளைவாகத் தென் ஆப்பிரிக்காவில் நம்மவர் படும் துயரங்களும் அவமானங்களும் கொஞ்சநஞ்சமல்ல. இன்றுங்கூட—ஆம், மகத்தான லட்சியங்களுக்காகப் போராடுவதாய்ப் பறை யடித்துக் கொண்டிருக்கும் இந்த மகாயுத்த காலத்திலும்கூட— நிலைமை இவ்வளவு மோசமாயிருந்தால், பல ஆண்டுகளுக்கு முன்பு எப்படி இருந்திருக்கவேண்டும்? அந்தப்

படுமோசமான நிலைமையை நாம் உள்ளபடி உணரும்படியும், அது ஓரளவு மாறும்படியும் செய்தவர் மகாத்மா காந்தியே ஆவர்.

*1893*-ம் வருஷம், முதல் முதல் காந்தியடிகள் தென் ஆப்பிரிக்காவுக்குப் போனர். அங்கே ஒரு இந்திய வியாபாரியின் ஸ்தாபனத்திற்குத் தொழில் முறையில் ஆலோசனை சொல்லும் பாரிஸ்டராகப் போனர். பாரிஸ்டரானலும் 'கூலி பாரிஸ்டர்' என்றே கருதப்பட்டாராம்,—இந்தியர்களை யெல்லாம் கூலிகள் என்று கருதிய வெள்ளையர்களால். நிறத் திமிர் கொண்ட அந்த வர்க்கத்தினரிடமிருந்து, 'கூலி பாரிஸ்டரு'க்குத் தகுந்த மரியாதைகள் கிடைத்தன!

ப்ரிடோரியா போகும் மார்க்கத்திலே நடுவிலுள்ள ஒரு ஸ்டேஷனில், இவர் பலவந்தமாக ஓர் இரவில் ரயில் வண்டியிலிருந்து இறக்கப்பட்டார்,—முதல் வகுப்பிலே பிரயாணம் செய்யக் கறுப்பருக்கு உரிமையில்லை என்ற காரணத்தால். மற்ருேரிடத்திலே கோச்சு வண்டியில் வெள்ளையருக்குச் சரி சமானமாக உட்கார்ந்தாரென்று ஒரு கொழுத்த டச்சுப் பிரயாணி இவருக்கு ஒரு பலத்த 'பூசை' கொடுத்தானும். ஜொஹானஸ்பர்க்கில் க்ராண்டு நாஷனல் ஹோட்டலில் இவர் தங்குவதற்கும் இடம் கிடையாது என்று துரத்தி விட்டார்கள். ப்ரிடோரியாவிலே 'பேவ்மெண்டில்' (நடைப்பாதையில்) வெள்ளையர்கள் தான் நடமாடலாம்: காந்தியடிகள் அந்தப் பாதை வழியாக நடந்து போனரென்று இவரை ஒரு காவற்காரன் உதைத்துவிட்டான்.

இப்படி யெல்லாம் தென் ஆப்பிரிக்கா போய்ச் சேர்ந்த சில தினங்களுக்குள்ளேயே, காந்தி, கறுப்பர்கள் அங்கே அனுபவித்த துன்ப வகைகளைச் சொந்த அனுபவமாகவே தெரிந்து கொண்டுவிட்டார்.

பாரிஸ்டர் காந்தி, தொழில் புரிவதை விட்டு இந்தியர்களின் உரிமைகளுக்காகப் போராடத் தொடங்கினுரென்பதும், காந்தி தம்பதிகள் சிறைவாசம் செய்ய நேர்ந்த தென்பதும் சரித்திரப் பிரசித்தமான செய்தி. அந்தப் போராட்டத்தில் அங்கே யிருந்த தமிழர்கள் இவருக்கு அருந்துணையாக இருந்தார்கள். அந்தத் தமிழர்கள் வீரம் வாய்ந்தவர்களென்று இவரே பாராட்டி யிருக்கிறுர். பழைய தமிழர்களைப்போல் அவர்களை வீர புருஷர்களாகவும் வீரப் பெண்களாகவும் ஆக்கிய பெருமை மகாத்மாவைச் சேர்ந்ததுதான்.

## கதவின் இடுக்கு வழியே

எனவே, காந்தியடிகள் தாய்நாட்டுக்குத் திரும்பியதும் தமிழர்கள் இவருக்குக் குதூகலமான வரவேற்பு அளித்ததில் அதிசயம் இல்லை. காந்தி தம்பதிகளின் வரவேற்புக்காகவே எங்கள் வீட்டிலும் அன்று அந்தத் தோட்ட விருந்து.

நானும் என் தாயாரும் பின்புற ஹாலில் இருந்தோம். கதவின் இடுக்கு வழியே நான் காந்தியைப் பார்க்க முயன்றேன். அதிலும் சங்கோசம். குரல் மட்டும் கேட்டது காதுக்கு ; தரிசனம் கிட்டவில்லை.

## அன்னையின் தோற்றம்

தூய வெள்ளைப் பாவாடையும் தாவணியும் அணிந்திருந்த ஓர் உருவம் எங்களை நாடி உள்ளே வந்தது. சிறிய மெலிந்த உருவம். உலக அனுபவத்தால் கனிந்த முகம்; தாயன்பு சொட்டும் களையான முகம். ஏக்கம் தேங்கிய கண்கள் ; உள்ளன்பு ஒளி வீசிய கண்கள். அவரே கஸ்தூரிபா காந்தி. நீண்ட கை வைத்த வெள்ளை அங்கி ஒன்றைப் போட்டுக் கொண்டிருந்தார். கைகளில் ஒரு ஜதை இரும்புக் காப்பு: வேறு அலங்காரமோ,

ஆபரணமோ கிடையாது. ஏழைக் குடியானவருடைய நாகரிக மனைவிபோலவே காணப்பட்டார்.

அந்த எளிய தோற்றத்தின் உயர்வு அப்பொழுது எனக்கு விளங்கவில்லை. அந்தஸ்து, அலங்காரம், படிப்பு இவைகளைப் பற்றிய பெருமிதம் குமுறிக் கொண்டிருக்கும் உள்ளத்திலே அதற்கெல்லாம் இடம் ஏது?

ஸ்ரீமதி காந்தி என்னைப் பார்த்துப் புன்முறுவல் செய்தார். நான் சிறுமி: வயது சுமார் பதினைந்து. எனினும் என் உடல் பூராவும் சுமந்திருந்த அத்தனை வைர நகைகளையும் பார்த்து, அவர் இரக்கம்கொண்டே சிறு நகை செய்ததுபோலப் பட்டது எனக்கு. உடனே அவற்றைக் கழற்றி வீசி எறிய வேணுமென்ற ஓர் ஆத்திரம்,—அந்தப் படாடோபமே அவலட்சணம் என்ற ஓர் உணர்ச்சி,—என் மனத்தில் ஒரு கணம் தோன்றி மறைய, பழையபடி பெருமிதத்துடன் உட்கார்ந்திருந்தேன். அவரோ என் தாயாரோடு அன்புடன் சகஜமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்.

மறுநாள் மாலை ஸ்ரீமதி காந்தி மட்டும் எங்கள் வீட்டுக்கு வந்தார். அவரை என் தாயார் தம்முடன் மயிலாப்பூரிலிருந்த 'லேடீஸ் ரிக்ரியேஷன் கிளப்'புக்கு அழைத்துச் சென்றார். சென்று, அங்கே அவரை வரவேற்கக் காத்திருந்த சீமாட்டிகள் பலருக்கும் அறிமுகப்படுத்தி வைத்தார். நானும் பொம்மைபோலச் சிங்காரித்துக் கொண்டு கூடப் போயிருந்தேன்.

## காந்தி தம்பதிகள்

அதே மாலை ஒரு கூட்டத்தில் காந்தி பேசினார். ஸ்ரீமதி காந்தியை அக்கூட்டத்திற்கு அழைத்துப் போவது எங்கள் கடமை ஆயிற்று. நாங்கள் மூவரும் காரில் ஏறிக் கொண்டு கூட்டத்திற்குப் போனோம். அந்த நாளிலும்

காந்தி யென்றால் கூட்டம்தான். ஸென்ட்ரல் ஸ்டேஷன் முதல் வி. பி. ஹால் வரை எள்ளுப் போட்டால் எள்ளு விழாது. எங்கும் ஒரே ஜனத் திரள்—கொந்தளிக்கும் சமுத்திரம் போலே. கார் விடுவது கஷ்டமாகி விட்டது. நாங்கள் இம்மாதிரிக் கூட்டங்களை முன் பின் பார்த்ததில்லை. பயந்தே போனோம். காரை விட்டு இறங்கக் கால் எழவில்லை. அந்த ஜன சமுத்திரத்திலே எப்படி நடந்து போவது ?

ஒரு வாலிபர் கஸ்தூரிபாவை உள்ளே அழைத்துப் போவதாகச் சொன்னார். உடனே கஸ்தூரிபாவும் காரை விட்டு இறங்கிச் சற்றும் தயங்காமல் அவர் பின்னே சென்று, பெருங் கூட்டத்தினிடையே மறைந்து விட்டார். முன் பின் தெரியாத அந்த வாலிபருக்குப் பின்னே ஸ்ரீமதி காந்தியைப் போகவிட்டு வீடு திரும்பிவிட்டோம். எங்கள் பயங்காளித் தனத்தை அப்போது உணர்ந்தோமில்லை. ஆனால் "அந்தச் சிறிய மெலிந்த உருவத்தை அந்தப் பெரிய கூட்டம் என்ன செய்துவிடுமோ ?" என்ற நடுக்கம் மட்டும் உள்ளுக்குள்ளே எங்களை வாட்டிற்று.

"என்ன மனுஷ்யன் இந்தக் காந்தி ! தம் மனைவியை இப்பெருங்கூட்டத்திலே ஒண்டியாக வரும்படி விட்டுப் போய் விட்டாரே ! இவருக்குத் தான் என்ன வன்னெஞ்சமோ?" என்று மனத்திற்குள் காந்திமகான்மீது கோபம் மூண்டது.

"இந்தியப் பெண்களும் அச்சமின்றி வெளியே போகக் கூடும் ; தம்மைக் காத்துக் கொள்ளக் கூடும் ; தேசத்திற்காகப் பல துறைகளிலும் பணி செய்யவும், சிறை செல்லவும் கூடும்" என்ற படிப்பினையை என்னைப் போன்றவர்களுக்கும் புகட்ட, அத்தகைய பயிற்சியைத் தம் மனைவிக்கு மகாத்மா அளித்து வந்தார்—என்பது நான் பின்னடி அறிந்து கொண்ட விஷயம்.

1930-ம்வூ சென்னையில் 'ஸ்திரீகள் சுதேசிச் சங்கம்' என்ற ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்தி அதைச் சார்ந்த தேச ஸேவிகைகளாகி, சுதேசிப் பிரசாரம், அன்னியத் துணிக் கடை மறியல் முதலியன செய்துவந்தோம். அக்காலத்தில் எத்தனையோ பெருங்கூட்டங்களினிடையே செல்லவும், போலீஸார் முன்னிலையிலும் துணிந்து ஊர்வலங்கள் நடத்தவும் தைரியம் உண்டாகிவிட்டது, எனக்கும் என்னைப்போல் வீட்டை விட்டு வெளியே வராமலிருந்த பல சகோதரிகளுக்கும்! அப்படி ஒரு காலமும் வந்து, நாங்களும் தைரியசாலிகளாகக் காட்சி அளித்ததற்கு ஒரு முக்கிய காரணம், அன்று அந்தப் பெருங் கூட்டத்தினிடையே அன்னை கஸ்தூரிபா தைரியமாகச் சென்ற தோற்றம் தானே?

ஒரு சமயம் பேஸின்ப்ரிட்ஜ் ஸ்டேஷனுக்குச் சென்று மகாத்மாவை வரவேற்றோம். கூட்டம் அசாத்தியமாகி விட்டது. எப்படியோ வாலண்டியர்கள் சூழ்ந்து கை கோத்துக்கொண்டு மகாத்மாவை மட்டும் பத்திரமாகக் காருக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள். கஸ்தூரிபா பின் தங்கி விட்டார். கூட்டத்தில் அகப்பட்டுக் கொண்டு மிகவும் சிரமப்பட்டார். நல்ல வேளை: நாங்கள் அவரைத் தேடிப்பிடித்துச் சென்று சூழ்ந்து கொண்டோம். அவரைக் காருக்குக் கொண்டு வந்து சேர்க்க அரைமணிக்கு மேலாகிவிட்டது. அன்று எனக்கும் என்னுடன் இருந்த சகோதரிகளுக்கும் உண்டான பெருமைக்கும் மகிழ்ச்சிக்கும் கங்குகரை உண்டோ?





தமக்குக் கிடைத்த வரவேற்புப் பத்திரத்தையும்
ஏலம் போடுகிறார் தேனாம்பேட்டையில்.

# 2. சென்ற மகாயுத்தத்திற்குப் பின்

சென்ற மகாயுத்தத்தில் மகாத்மா அரசாங்கத்தாரோடு ஒத்துழைத்தார். அஹிம்ஸா தர்ம வாதியாக இருந்தும், போருக்குக்கூட ஆளும் பணமும் சேர்த்து உதவினர். அதன் பலனுக இந்தியாவுக்கு விரைவில் சுய ஆட்சி சித்திக்கும் என்று எதிர் பார்த்தார். ஆனல் அதற்கு மாருக அரசாங்கத்தார், 1917-ம் ஆண்டின் இறுதியில் 'ரௌலட் கமிட்டி' என்ற ஒரு கமிட்டியை ஏற்படுத்தினர்கள். சதிகாரர்களை அடக்கவேண்டும் என்ற வியாஜத்தால் 'ரௌலட் சட்டம்' பிறந்தது. 'புரட்சிக் காரர்கள்' என்று வாலிபர்கள் பலர் பந்தோபஸ்தில் வைக்கப்பட்டார்கள்.

அராஜக இயக்கத்தைச் சமாளிப்பதற்குக் கொண்டு வரப்பட்ட 'ரௌலட் சட்டம்' நிரபராதிகளான தேச பக்தர்களையும் பாதிக்கும்படி யிருந்ததால், அந்தக் கொடிய அடக்குமுறைச் சட்டத்தை ஸாத்விக முறையில் ஒழிக்க வேண்டுமென்று காந்திஜி முயற்சி செய்தார்.

பிறகு பஞ்சாபிலே 'ஜாலியன் வாலாபாக் படு கொலை' என்ற பயங்கரமான சம்பவம் நிகழ்ந்தது. அதன் விளைவாக, காந்திஜி ஒத்துழையாமை இயக்கத்தைத் தோற்றுவித்தார். அப்பால் சிறைவாசம் முதலிய பல துன்பங்களுக்கும் ஆயிரக் கணக்கான மக்கள் ஆளானர்கள். இத்தகைய சம்பவங்களை ஒட்டி எத்தனை மாறுதல்கள் பலர் வாழ்க்கையிலும், பலர் வீடுகளிலும்!

பட்டம் பதவிகள் துறக்கப்பட்டன. எங்கும் காந்தி குல்லா, கதர் மயம், அன்னிய ஆடைகளின் தகனம். இவையெல்லாம் எங்கள் வீட்டிலும் நடைபெற்றன.

இந்த விஷயத்தில் என் தகப்பனாரை நல்ல அதிர்ஷ்டசாலி என்றே சொல்லவேண்டும். என்னுடைய தாயாரின் சம்மதம் அவருக்கு உடனே கிடைத்துவிட்டது. நாங்கள் எல்லோருமே அவருடன் ஒத்துழைக்கலானோம்.

வீட்டிலிருந்த வைர நகைகள் இரும்புப் பெட்டியில் புதைந்து போயின. வெளியே உலாவியவை முத்து, தங்க நகைகளே. எங்கள் ட்ராயிங் ரூம் சுவரை மகாத்மாவின் பெரிய உருவப் படம் ஒன்று அலங்கரித்தது.

குட்டைக் கால்களும், வளைந்து உயர்ந்த மூக்கும், நீண்டு நிற்கும் அகன்ற காதுகளும் சாதாரணமாக ஒருவரைச் சௌந்தரிய புருஷராகக் காட்டக் கூடியவைகளா? 'அலி' சகோதரர்கள்போல் பெயருக்கும் புகழுக்கும் ஏற்ற ஆறடி உயரமுள்ள ஆஜானுபாகு இல்லையே மகாத்மா? ஆத்மாவினால் பெரியவரே யன்றி, ஆகிருதியில் சிறியவர் தானே! எனினும், தினம் ஒரு முறை கைகுவித்து வணங்கும்படி செய்துவிட்டது இவருடைய உருவப் படம். உடல் முழுதும் வெள்ளைக் கதர் போர்த்துக் கையில் கீதையுடன் நின்றிருந்த அந்தத் தூய தோற்றம்—அந்த முகத்திலே திகழ்ந்த புன்சிரிப்பு—ஆஹா, இவைகளுக்குத் தான் எவ்வளவு ஆகர்ஷண சக்தி!



# 3. வைக்கம் சென்றபோது

1925-ஆம் திருவாங்கூர் ராஜ்யத்திலே வைக்கம் என்ற ஸ்தலம் திடீரென்று அகில இந்தியப் பிரசித்தி பெற்று விட்டது. அங்கே கிருஷ்ணன் கோவிலைச் சுற்றியுள்ள ரஸ்தாவில் ஹரிஜனங்கள் (அதாவது, ஸவர்ணர்கள் அல்லாத இந்துக்கள்) நடமாடக் கூடாதென்று தடுக்கப்பட்டிருந்தார்கள். ஆனால் அந்த ரஸ்தாக்களைக் கிறிஸ்தவர்களும் முஸல்மான்களும்கூட உபயோகித்து வந்தார்கள். இந்த நிலையில் "தீண்டத் தகாதவர்கள்" என்று ஒதுக்கப்பட்டிருந்தவர்களும் அத்தகைய ரஸ்தாக்களில் செல்லவேண்டும் என்பதற்காக, 'வைக்கம் சத்தியாக்கிரகம்' நடை பெற்றது.

மகாத்மா வைக்கத்திற்குப் போகச் சென்னை வந்து எங்கள் வீட்டிலே தங்கினர். முதல் தடவை வாசலிலே நிறுத்தி உபசரித்து அனுப்பிவிட்ட மகானை உட்புற ஹாலுக்கு அழைத்து, கதர்த் திண்டு மெத்தையில் வீற்றிருக்கச் செய்து பூஜித்து விருந்தோம்பிக் களித்தோம்.

அன்று வந்த காந்தி வேறு; இன்று வந்த காந்தி வேறு. தென் ஆப்பிரிக்க இயக்கத்தின் பயனாகத் தேச மக்கள் கண்முன் இவர் அப்பொழுது ஒரு சிறந்த சமூக ஊழியராக மட்டும் விளங்கினர். பிறகு தாய் நாட்டுச் சேவை இவரை ஒரு லட்சிய புருஷராக்கிவிட்டது. பாரத தேவிக்குத் தான் இப்போது எத்தனை வீரப் புதல்வர்கள்! இவர்கள் எல்லாம் மகாத்மா கண்டெடுக்கும்வரை எங்கே மறைந்திருந்தார்கள்?

இந்திய தேசத்தை ஒரு பூந்தோட்டமாக்கி அதிலே தேச பக்தி, சமூகப் பற்று ஆகிய பூஞ்செடிகளைப் பயிர் செய்ய, அவற்றிலே பூத்த பூக்கள், கனிந்த கனிகள்

எனலாம் அந்தத் தொண்டர் குழாத்தை. மகாத்மா காந்திதான் அந்தத் தோட்டக்காரர்,—அந்தப் பூந்தோட்டத்தின் தலைவர். இவருடைய பூங்குடலை 'எங் இந்தியா.'

இது மட்டுமா? நம் நாட்டிலே விளையாத அன்னிய நாட்டுப் புஷ்பங்களையு மல்லவா இங்கே பூக்கும்படி செய்து விட்டார் மகாத்மா? மீராபென் போன்ற சகோதர சகோதரிகளை அறியாதார் யார்?

தேசியப் போரை நடத்தும் தீர தளபதியாகி வந்த மகாத்மாவைத் தரிசிக்க நம் நாட்டு மக்கள் லட்சக் கணக்கிலே ஒருவரை ஒருவர் நெட்டித் தள்ளிக்கொண்டு வந்தார்கள் என்றால், அதில் என்ன ஆச்சரியம்! இவருடைய முகத்திலே அப்படி ஓர் அபூர்வ தேஜஸ் திகழ்ந்தது! அந்தக் கூர்மையான கண்கள் கருணை-ஊற்றுக்களாக மிளிர்ந்தன.

எங்கள் வீட்டிலும் இவரைத் தரிசிக்கத் திரள் திரளாக ஜனங்கள் வந்து குவிந்த வண்ணமாயிருந்தனர். தேர்த் திருநாள் பட்ட பாடுதான். வந்தவர்களில் பிரமுகர்களும் பலர் இருந்தனர்.

செல்வர், பிரபலஸ்தர் பலர் காத்துக்கிடக்க, எவ்வளவு அன்புடனும் ஆர்வத்துடனும் உரையாடினார் மகாத்மா, ஒவ்வொரு எளிய தேசத் தொண்டரோடும்!

இவருடைய பேச்சுத் திறன், ஆழ்ந்த கருத்தமைந்த கேள்விகள், ஹாஸ்யம் நிறைந்த—ஏன்? குறும்புத்தனமான—வாக்கியங்கள், அந்தக் கனிந்த-மிளிர்ந்த-பார்வை, இடையிடையேஹிருதயத்திலிருந்து பொங்கி வெளிப்பட்ட களிநகை, இவை யாவும் ஏழை பணக்காரர் என்ற நினைப்பின்றி, அறிஞர் அறிவீனர் என்ற பாகுபாடின்றி, சொந்த நாட்டார் பிற நாட்டார் என்ற பேத புத்தியின்றி, எல்லோரையும் அப்படியே வசீகரித்துவிட்டன.

அச்சமயம் சென்னை நகரசபைத் தலைவராக இருந்தவர் கான்பகதூர் ஊஸ்மான் சாஹிப். அவர் தலைமையில் நகர சபையார் மகாத்மாவுக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார்கள். அந்தக் கார்பொரேஷன் கூட்டத்திற்கு நான் போயிருந்தேன். அந்த உபசாரப் பத்திரத்திற்குப் பதிலளிக்கையில் மகாத்மா யாதொரு ஆவேசமும் இல்லாமல் மிகவும் அமைதியாக, நிதானமாக, தாழ்ந்த குரலில், ஒவ்வொரு வார்த்தையும் தெளிவுபடப் பேசினார். அந்த வார்த்தைகள் ஹிருதயத்தின் ஆழத்திலிருந்து எழுந்தன என்று தோன்றியது.

பிறகு திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஒரு மாபெருங்கூட்டத்திலே காந்தியடிகள் பேசினார். வீட்டிலே வந்த விருந்தினர்களை உபசரிக்கும் மும்முரத்திலே நான் அந்தப் பிரசங்க விருந்தை இழந்துவிட்டேன்!

## வளையலைக் கழற்றிக் கொடுப்பாயா?

எங்கள் வீட்டிலே ஒரு பக்தர் தம் சிறு பெண்ணுடன் வந்திருந்தார், மகாத்மாவைப் பார்க்க. காந்தி அக்குழந்தையைப் பிரியத்துடன் தம் மடிமீது இருத்திக் கொண்டார். குழந்தைக்கு வயது ஆறு இருக்கும். கையில் இரண்டு ஜதைத் தங்க வளையல்கள் மட்டும் பூட்டியிருந்தன. மெள்ள அதன் கைபிடித்து அழகு பார்ப்பது போலப் பார்த்தார் காந்தி.

"எனக்கு ஒண்ணு வேணும்: கொடுப்பாயா?" என்று கேட்டார், அக்குழந்தையைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தவராய். "ஓ" என்று வந்தது தங்கு தடையின்றிப் ப்திில், அக்குழந்தை வாயிலிருந்து. "உன் வளையல்களைக் கழற்றிக் கொடுப்பாயா எனக்கு?" என்றார் மீண்டும், பிச்சையெடுப்பதிலே பலே பேர்வழியான இவர். குழந்தை சற்றுத் தயங்கிற்று; திரும்பத் திரும்பத் தகப்பனாரைப் பார்த்தது.

தகப்பனார் திகைத்துப் போனார். "கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதே!" என்று சுற்றி யிருந்தோர் சிலர் அவரை நோக்கிக் குறுநகை புரிந்தனர். எனினும் அவர் சட்டென்று சமாளித்துக்கொண்டு, "பாப்பா! காந்தித் தாத்தாவுக்கு உன் வளையல்களைக் கொடம்மா!" என்று சொல்லிவிட்டார்.

உடனே குழந்தையின் கையைப் பிடித்து வளையல் களைக் கழற்ற முயன்றார் இந்தத் தாத்தா. வெகு நேரம் முயன்றும் முடியவில்லை. அவைகளைக் கழற்றும் அந்த முயற்சியில் குழந்தையின் கைதான் வலிக்குமென்று தோன்றியது. ஆனாலும், அந்தக் குழந்தையின் முகம் சற்றும் சுணங்கவில்லை. கைக்கெட்டியது வாய்க்கு எட்ட வில்லையா? ஆனல் இவரா விடுகிறவர்? "கொண்டு வாருங்கள் கத்தரிக்கோலை!" என்றார்.

இந்தக் காட்சி சுமார் அரைமணி நேரமாக நடந்தது. தூரத்தில் சில பெண்களுடன் நானும் இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எனக்கு அந்தக் குழந்தையின் மீதே இரக்கம் உண்டாயிற்று. மகாத்மா மீது சற்றுக் கோபந்தான். நகைப் பைத்தியம் அன்றும் என்னை விட்டு நீங்கின பாடில்லை.

என் கழுத்தில் எனக்கு மிகவும் பிரியமான ஒரு முத்தாரம் இருந்தது. (வைர நகைகள் தான் அணியக் கூடாதே!) விரைவில் உள்ளே சென்றேன். அதைக் கழற்றிப் பெட்டியில் பத்திரமாய் வைத்துப் பூட்டி விட்டு வெளிவந்தேன். மகாத்மாவின் கண்ணில் அது பட்டு, அதையும் கேட்டுவிட்டாரானால்?

நம் தேசத்துப் பெண்களுக்கு நகைப் பைத்தியம் கொஞ்சமா? அதை ஓரளவு குறையும்படி செய்தவர் மகாத்மா ஒருவர் தான். பெண்கள் மனத்திலிருந்து அந்தப் பைத்தியம் ஒருவாறு நீங்கவும், பொது நிதிகளுக்கு

அவர்கள் உதவவும், மகாத்மா கையாடி வந்த வைத்திய முறையை அப்போது நான் கொண்டாடா விட்டாலும், இப்பொழுது மனப்பூர்வமாய்க் கொண்டாடத்தான் செய்கிறேன்.

## புடவைகளை ஏலம் கூறுதல்

தமக்குக் கிடைத்த நகைகளை மகாத்மா ஏலம் கூறும் விதமே ஓர் அற்புதக் காட்சியாக இருக்கும். இவரை அந்தத் தொழிலில் வெல்ல எவராலும்—எந்த மார்வாடியாலும்—இயலாது.

என் தாயாருக்குப் பலவீனமான சரீரம். எப்பொழுதும் நோயுற்று வருந்துவார். அவரால் முரட்டுக் கதர் கட்டிக்கொள்ள முடியவில்லை. இச்செய்தி மகாத்மாவுக்குத் தெரிந்தது. உடனே இரண்டு பெட்டிகள் நிறையக் கதர் பம்பாயிலிருந்து தருவித்தார். அதை வியாபாரம் செய்ய பரூச்சா என்ற பார்ஸி சகோதரரையும் வரவழைத்தார்.

மெல்லிய ரகத்தில் நேர்த்தியாகப் பூவேலை செய்த கதர்ப் புடவைகள் பல, அப்பெட்டியில் இருந்தன. ரூபாய் முப்பதிலிருந்து அறுபத்தைந்து, எழுபதுவரை விலையுள்ள சேலைகள். அவைகளில் நாலைந்தை என் தாயாரிடம் தந்தார் மகாத்மா. மற்றவைகளை விற்றுக் கொடுக்கும்படி* ஸ்ரீமதி ஜானம்மாளுக்கும் எனக்கும் கட்டளை.

இவர் கட்டளையையும் மீற முடியுமோ? அத்தனையும் விற்றுக் கொடுத்தார் ஜானம்மாள். பரூச்சாவை ஒரு மாதம் எங்கள் வீட்டிலேயே தங்கிச் சென்னையைக் கதர் மயமாக்கி விட்டுத் திரும்பும்படி சொல்லிச் சென்றார்.

---

* ஸ்ரீமதி ஜானம்மாள் ஸர். ஸி. பாஷ்யம் ஐயங்காரின் கடைசிப் புதல்வி; தேச சேவை செய்து என்னுடன் சிறை சென்றவர்.

மகாத்மா மகாத்மாவாக மட்டுமில்லை; பேர்போன வியாபாரியாகவும் திகழ்ந்தார் அன்று!

## “இந்திய மாதா”

“இந்திய மாதா” என்று சொன்னதும் தேசபக்தர்களுக்கு எவ்வளவு பக்தியுணர்ச்சி உண்டாகிறது! இத்தகைய அருமைப் பெயருடன் ஒரு புஸ்தகம் எழுதப்பட்டால், அது சாதாரணமாய் ஒரு தேச பக்த நூலாக இருக்கக் கூடுமல்லவா? எனினும் “இந்திய மாதா” (Mother India) என்ற பரிசுத்தமான பெயருடன் தேசத் துரோகிகள் போற்றக் கூடிய ஒரு புஸ்தகம் எழுதப்பட்டதென்றால், அது எவ்வளவு அதிசயமான சம்பவம்!

அப்படிப்பட்ட ஒரு புஸ்தகம் மிஸ் காதெரைன் மேயோ என்ற ஒரு அமெரிக்க ஸ்திரீயினால் எழுதப்பட்டது. இந்தியர்களுடைய குற்றங் குறைகளையெல்லாம், நாடெங்கும் பரபரப்பாக ஓடித் திரிந்து தேடித் துருவி எடுத்து, துவேஷ மனப் பான்மையுடன் வெளியிட்ட புஸ்தகம் அது.

அந்தப் புஸ்தகத்தினால் இந்தியர்களுக்கு ஏற்பட்ட மனப் புண் இப்படிப்பட்டதென்று சொல்ல முடியாது. “இந்தியர்கள் சுயராஜ்யத்திற்குத் தகுதியற்றவர்கள்” என்று பிரசாரம் செய்வதற்காக எழுதப்பட்ட அந்தப் புஸ்தகத்திற்கு எத்தனையோ மறுப்புகளும் கண்டனங்களும் தோன்றின!

மகாத்மாவோ ஒரே சொற்றொடரில் எவ்வளவு பொருத்தமாக விமர்சனம் செய்துவிட்டார்! “சாக்கடை இன்ஸ்பெக்டரின் யாதாஸ்து” என்ற அந்தத் தொடர் இன்னும் நம்மவர் ஞாபகத்தில் இருக்கத்தான் செய்கிறது!

மகாத்மா அந்தப் புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார், — "யங் இந்தியா" வில் தமது அபிப்பிராயத்தை வெளியிடுவதற்காக. "மிஸ். மேயோவின் புஸ்தகம் எப்படி யிருக்கிறது?" என்று ஏதோ துணிச்சலாய்ப் பேச்சுவாக்கில் கேட்டுவிட்டேன்.

என்னை நோக்கி, "நீ இதைப் படித்திருக்கிருயா?" என்று கேட்டார். "இல்லை" என்றேன். "இந்த ராத்திரிக்குள் அதை முழுதும் படித்து முடித்த பிறகு என்னிடம் வா" என்ருர். அப்படியே செய்து விட்டு இவர் முன்னே போய் நின்றேன்.

"உன் அபிப்பிராயம் என்ன? இந்திய ஸ்திரீகளைக் குறித்து மிஸ். மேயோ எழுதி யிருப்பதைப்பற்றி நீ என்ன சொல்லுகிருய்?" என்று என்னையே மடக்கிக் கேட்டார். என்ன செய்வது? இவரோ என் பதிலை எதிர் பார்த்திருந்தார்.

"பெரும்பாலும் அபத்தக் களஞ்சியம். எனினும் சில உண்மைகள் இருக்கத்தான் செய்கின்றன. இந்தியப் பெண்களில் படித்தவர் சிலரே. அதிலும் தேச சேவையிலோ, சமூக சேவையிலோ ஊக்கம் உள்ளவர் வெகு சொற்பம். குடும்ப வாழ்க்கையில்தானே முற்றும் ஈடு பட்டிருக்கிருர்கள்?" என்றேன் தயங்கிக் கொண்டே.

"அப்படியானுல், அந்தக் குறையைத் தீர்ப்பது உன்னைப் போன்ற படித்த பெண்களின் கடமை அல்லவா? உன் சகோதரிகள் அறியாமையில் ஆழ்ந்து கிடப்பதை நீ சும்மா பார்த்துக் கொண்டிருக்கலாமா?" என்ருர்.

மேயோவின் புஸ்தகம் ஏற்கெனவே என் மனசைக் கிளறி விட்டிருந்தது. சுடச்சுட மகாத்மா வார்த்தையும் சேரவே, "நாமும் சமூக சேவை செய்ய வேண்டியது

அவசியம்" என்ற எண்ணம் என் உள்ளத்தில் உருக் கொள்ளலாயிற்று.

## அந்த மூன்று தினங்கள்

திங்கட்கிழமை மகாத்மாவின் மௌன தினம். மாலைப் பொழுதில் மாடி அறையிலே வீற்றிருந்து மௌனமாக "யங் இந்தியா"வுக்குக் கட்டுரைகள் எழுதிக்கொண் டிருந்தார்.

இவருக்குப் பாட்டுப் பிடிக்கும் என்று அங்கிருந்த சிலர் என்னை வீணை வாசிக்கச் சொன்னார்கள். நானும் சில பாட்டுக்களை வீணையில் வாசித்தேன். வாசித்துக் கொண்டிருக்கும் பொழுதே மகாத்மாவிடமிருந்து ஒரு துண்டுச் சீட்டு வந்தது. ஆச்சரியத்துடன் பிரித்துப் பார்த்தேன். "உன் சங்கீதத்தைக் கேளாமல் நான் வேறு காரியமாக இருக்கிறேன் என்று நீ எண்ணிக் கொண் டிருக்கலாம். ஆனால் காரியத்தோடு காரியமாய் உன் பாட்டையும் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்!" என்று இவர் எழுதி யிருந்ததைப் படிக்கவும் எனக்கு வெட்கமாய்ப் போய் விட்டது.

அதற்கு ஏற்றாற்போல் மஹாதேவ தேசாய் என்னைப் பார்த்து, "நீ பாடிய பாட்டுக்களின் பொருளாவது கருத்தாவது உனக்கு விளங்குகிறதா?" என்று கேட்டு விட்டார். நான் பாடிக்கொண்டிருந்தவை தியாகராஜர் கிருதிகளும், தீக்ஷிதர் கிருதிகளும். அர்த்தமாவது, விளங்குகிறதாவது எனக்கு, அந்தக் காலத்திலே!

மகாத்மா எங்கள் வீட்டில் தங்கிய அந்த மூன்று நாளும் பொழுது கழிந்த விதம் தெரியவில்லை. "காந்தி என்ன என்ன செய்கிறார்? இவருக்கு என்ன என்ன தேவை? இவரை யார் யார் பார்க்க வருகிறார்? இவர் என்ன பேசுகிறார்? எங்கெங்கே போகிறார்? எப்படிச்



சென்னை நகர சபைத் தலைவராக இருந்த கான்பகதூர் (இப்போது ஸர்) மகமீது உஸ்மான் ஸாஹிப் மகாத்மாவை வரவேற்கிருர்

(பக்கம் 21)

சிரிக்கிருர்?"—இவையே எங்கள் பேச்சும் நினைப்பும் காரியமுமாக இருந்தன.

இவர் சென்னையை விட்டுப் போனதும், எங்களுக்கு ஒன்றும் செய்யத் தோன்ருமல் போய் விட்டது; எல்லாம் சூனியமாகத் தோன்றிற்று! வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தோம். இவர் தங்கிய இடம், உபயோகித்த சாமான்கள்—எல்லாம் புனிதமாய்க் காணப்பட்டன. சொல்ல முடியாத இன்பங் கலந்த ஒரு துன்ப உணர்ச்சி—ஒரு மகானைத் தரிசித்துப் பிரிந்ததின் பயன்—எங்கள் உள்ளத்திலே உண்டாயிற்று. நாங்கள் பழைய நிலைக்கு வரச் சில தினங்கள் சென்றன.





திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஒரு மாபெரும் கூட்டத்திலே காந்தியடிகள் பேசினுர் (பக்கம் 21)

# 4. அன்னையை அறிந்து கொண்டது

1927-ஆம் இலங்கைக்குப் பயணமாகி மகாத்மா சென்னைக்கு வந்தபோது அன்னை கஸ்தூரிபாவும்கூட விஜயம் செய்திருந்தார். இந்தத் தடவை "கஸ்தூரி பாவுடன் நெருங்கிப் பழகும் சந்தர்ப்பம் கிடைத்ததே!" என்று அடங்கா மகிழ்ச்சி கொண்டேன்.

## உணவு தயாரிக்கும் அன்னை

கஸ்தூரிபாவுக்கு மகாத்மாவின் உணவு தயாரிப்பது முதலிய அலுவல்கள் சதா இருந்து கொண்டிருக்கும். அவருக்கு உதவியாக இருந்து மகாத்மாவுக்குச் சேவை செய்யும் பாக்கியம் கிடைத்தது ஜானம்மாளுக்கும் எனக்கும்.

உப்பில்லாமல் சமைத்த கீரை, ரொட்டி, நன்ருய்க் காய்ச்சி வடிகட்டின ஆட்டுப் பால், தேன், பழத் தினுசில் ஒன்று — இவைதான் மகாத்மா காந்தியின் தினசரி ஆகாரம்.

கஸ்தூரிபா வெகு ஜாக்கிரதையுடன் சுத்தமாய், சரியான சமயத்திற்கு, இவைகளை யெல்லாம் தயாரித்து வைப்பார். ஆனுல் எங்கள் அறியாமையினுலும், காந்தி மீது எங்களுக்கிருந்த அன்பினுலும், சில பிசகுகள் நேர்ந்து விடுவதுண்டு. பழ வகை ஒன்று அதிகம் வைத்து விட்டாலும் சரி; அல்லது உணவின் அளவு தினசரி உள்ளதற்குச் சற்றுக் கூடவேயிருந்து விட்டாலும் சரி,— மகாத்மாவுக்குக் கொஞ்சமும் பிடிக்காது.

மகாத்மா ஒருவரை உரக்கக் கண்டித்துக் கூறியதை யாரும் பார்த்திருக்க மாட்டார்கள்—அவருடன் இருந்து



கடற்கரைப் பிரசங்க மேடையில் ஸ்ரீ எஸ். ஸ்ரீநிவாஸையங்காருடன் காந்தியடிகள் வீற்றிருப்பது
(பக்கம் 21)

வந்த மகாதேவ்கூட. எனவே, எங்களால் பிசகு நேரும் போது இவர் மனைவியைக் கூர்ந்து பார்த்து, 'இதை எடுத்து விடு' என்று வெகு நிதானமாகத் தான் சொல்லுவார். ஆனால் அந்தச் சொல்லே, அந்தப் பார்வையே, போதும்; "ஏன் இப்படிச் செய்துவிட்டோம்?" என்றாகிவிடும் எங்களுக்கு. கொஞ்சமும் முகம் கோணாமல் குற்றம் எல்லாம் தாமே சுமந்து அப்படியே மௌனம் சாதிப்பார் கஸ்தூரிபா. அவரைப் பார்த்து எங்கள் உள்ளம் உருகிப் போகும்.

## அன்னையின் குணாதிசயம்

கஸ்தூரிபாவுக்குத் தம் பிள்ளை பேரன் பேத்தி முதலானவர்களிடம் அதிகப் பிரேமை. அவர்களுடைய இளமைச் சேஷ்டைகளைப்பற்றி எங்களுடன் சதா பேசிக் கொண்டிருப்பார். எங்களுடைய குடும்ப விஷயங்களைத் தெரிந்து கொள்வதிலும் அவருக்கு ஆர்வம் உண்டு.

பழைய காலத்துப் பெண்களைப் போல் தெய்வ பக்தியும் பதிபக்தியும் பூண்டவர். நம்முடைய சில நல்ல ஆசார அனுஷ்டானங்களை வெகுவாய்ப் போற்றுவார். கோயிலுக்குப் போய் ஸ்வாமி தரிசனம் செய்வதில் அதிகப் பற்றுடையவர். ஆனால் மகாத்மாவுக்கு அவ்வளவு நம்பிக்கையில்லை: ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேசம் இல்லாதவரையில், அந்த ஆலயங்களுக்குத் தாமும் போவதில்லை யென்றிருந்தார். எனவே, இவரைப் பின் பற்றி அன்னை கஸ்தூரிபாவும் ஆலய தரிசனத்தை விட்டிருந்தார்.

மிகப் பொறுமையுள்ளவர் கஸ்தூரிபா. காரியமே கண்ணாயிருப்பவர். எங்களிடமெல்லாம் அன்புள்ள அன்னையாகவே ஒழுகினார். எங்களுக்குச் சமையல் முதலிய காரியங்கள் தெரியாமலிருப்பதைப் பார்த்து இரங்கினார். பெண்களுக்கு வீட்டு வேலை தெரிய வேண்டியது அவசியமென்று வற்புறுத்தினார்.

ஆயினும், தாம் இளமையில் கல்வி கற்றுக் கொள்ளாமல் போனதற்காக மிகவும் வருந்தினர். ஒழிந்த வேளைகளில் ஆங்கிலமும் ஹிந்தியும் பேசவும் படிக்கவும் கற்று வருவதாயும், ஆனல் கற்பது ஞாபகத்தில் நிற்பதில்லை யென்றும் சொல்லி வருத்தப்பட்டார்.

## அன்னையின் பண்பாடு

கஸ்தூரிபாவைப் பற்றித் தெரிய வேண்டிய அளவிற்கு நம்மில் பலருக்கும் தெரியாது. மகாத்மாவைப் பற்றி நன்றாகத் தெரிந்தவர்களுக்கும், அவருடைய வாழ்க்கைத் துணைவியைக் குறித்து விசேஷமாக ஒன்றும் தெரிந்திருக்க முடியாது. அன்னையின் ஆடம்பரமற்ற வாழ்க்கை இதற்கு ஒரு காரணம்; தற்காலக் கல்விப் பயிற்சியில் இவர் முன்னணியில் நிற்காதது மற்ரொரு காரணம்.

ஆனல் அவரது அறிவுப் பயிற்சியிலே ஏதாவது குறைவிருந்தால் அதைத் தம்முடைய குணதிசயத்தைக் கொண்டு நிறை செய்து கொண்டார். தம்முடைய ஹிருதயப் பண்பாட்டைக் கொண்டு கல்வி யறிவில்லாக் குறையைப் பூர்த்தி செய்து கொண்டார். பண்பாட்டின் (culture) முக்கிய அம்சமான ஹிருதயப் பண்புதான் கஸ்தூரிபாவிடம் எவ்வளவு செழித்துக் காணப் பட்டது!

அறிவுப் பயிற்சியைக் கலாசாலைகளில் அடையலாம். வீட்டிலேயே புஸ்தகங்கள் மூலமாகவும், உபாத்தியாயர் மூலமாகவும் எத்தனையோ விஷயங்களைக் கற்றுக் கொள்ளலாம். ஆனல் ஹிருதயப் பண்பை அப்படி அடைய முடியுமா? இதை வாழ்க்கை-அனுபவங்களின் மூலமாகத்தானே அடையமுடியும்? தாம்பத்ய வாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் தானே அடைய முடியும்? நம்முடைய சமூகம் இருக்கிற

நிலைமையிலே, இந்நாளில் ஏட்டுப் படிப்பைத்தான் நம்மால் அடைய முடிகிறது.

ஆனால் கஸ்தூரிபா காந்தி அடைந்திருந்த அந்த ஹிருதயப் பண்பை அடைவது சிரமமான காரியம்தான். தனி வாழ்வு, குடும்ப வாழ்வு, உற்றார் உறவினர்களின் பழக்கங்கள், கோவில், இந்நாளில் சங்கம், க்ளப்—இவற்றால் ஓரளவு ஹிருதயப் பண்பை அடைய முடிகிறது. ஆனாலும் கஸ்தூரிபா காந்தி அடைந்த மாதிரி அந்தப் பரந்த—உயர்ந்த—பண்பை அடைய முடியாது.

வாழக்கையிலே குறுக்கிடும் இடையூறுகளைக் கண்டு மனச் சோர்வடையாமல் ஈடு கொடுத்துப் பிறர் மனம் நோகாதபடி கைங்கரிய ரூபமான தூய வாழ்வு வாழ்கிறவர்களுக்கு விசேஷமாய் அனுபவ சித்தமாகக் கிடைக்கக் கூடிய பண்பாடல்லவா அன்னையின் ஹிருதயப் பண்பு?

உலகப் பணி மூலமாகவும், உலகம் போற்றும் ஒரு மகானின் தர்ம பத்தினி என்ற வாய்ப்பின் மூலமாகவும் கிடைக்கக்கூடிய அருமையான அந்தப் பண்பாடு, சாதாரண ஸ்திரீகள் பெறக்கூடியதாகுமா?

புதிய நாகரிக முறைப்படி படாடோபமாகவும் சாமர்த்தியமாகவும் நடந்துகொள்ளும் வகை அறியாதவராகையால், அவர் தம்முடைய அருமையான குணங்களையும் ஹிருதயப் பண்பாட்டையும் உலகத்தார் அறியாத வண்ணம் மறைத்து வந்தார்.

உலகிலே மகாத்மா தம்முடைய அபார ஆற்றலால், ஒரு சூரியன் போல் ஜாஜ்வல்யமாய்ப் பிரகாசித்து வந்தார் என்றால், இவரது வாழ்க்கைத் துணைவி அந்தச் சூரியனுடைய தீவிர கிரணங்களை உள்வாங்கித் தண்மையாக்கிப் பிரதிபலிக்கும் சந்திரன் போல் துலங்கினார் எனலாம்.

கல்வித் துறையில் சிறந்தோங்கும் பல ஸ்திரீ ரத்தினங்கள் நமது நாட்டிலே இருந்தபோதிலும், பாரத நாட்டைச் சேர்ந்த பெண்மணிகளுக்குள்ளே தலைசிறந்து விளங்கியவர்,—நக்ஷத்திரக் கூட்டத்திற்கு மத்தியில் சந்திரன் போலத் துலங்கியவர்—கஸ்தூரிபா என்ருல், அது மிகையாகுமா?

சீதை, சாவித்திரி, தமயந்தி போன்ற ஸதிமணிகளின் பரம்பரையிலே வந்த அம்மை ஸௌபாக்யவதி கஸ்தூரிபா காந்தி.



# 5. தர்ம சங்கடம்

இடையே பல ஆண்டுகள்; பல மாறுதல்கள். மகாத்மாவுக்கும் தகப்பனருக்கும் இடையே அபிப்பிராய பேதம் தோன்றிவிட்டது, காங்கிரஸ் திட்டம் குறித்து. இந்த அபிப்பிராய பேதம் நாளடைவில் மகத்தான அபிப்பிராய பேதமாகி விட்டது.

கல்கத்தாவில் நடந்த ஸ்பெஷல் காங்கிரஸுக்குப் பிறகு என் தந்தையார் காங்கிரஸிலிருந்து விலகி விட்டார்; தேசிய வாழ்க்கையிலிருந்தே முழுதும் விலகி விட்டார்.

* * *

தேசம் எங்கும் காந்தியடிகளின் "உப்பு ஸத்தியாக்கிரகம்" பரவிக்கொண்டிருந்தது. என்னல் சும்மா இருக்க முடியவில்லை. ஆனலும் தகப்பனரைக் காட்டிலும் புத்தி சாலி என்ற எண்ணமோ, தைரியசாலி என்ற எண்ணமோ எனக்கு இல்லை. இந்த நிலை மிகவும் தர்ம சங்கடமாக இருந்தது.

தகப்பனரின் அபிப்பிராயத்தை மாற்ற முயன்றேன். எவ்வளவோ விவகரித்துப் பார்த்தும் அவரை அசைக்க முடியவில்லை. விவகாரத்திற்குப் பதில்-விவகாரங்கள் தங்கு தடையின்றி வந்துகொண்டிருந்தன.

இந்த இயக்கத்தில் சேர அவரது அனுமதியையாவது பெற முயன்றேன். அந்த முயற்சியும் வீணயிற்று. அவருடைய ஆணித்தரமான கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் விழித்தேன்.

முடிவில், ஸ்ரீமதி காந்தி அன்னியத் துணிக் கடைகளில் மறியல் செய்து சிறை சென்றதைக் கேள்விப்பட்டு, நானும் தகப்பனாரின் சம்மதம் பெருமலே அந்த இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை செல்லத் துணிந்தேன்.

இது தகப்பனாருக்குத் தெரிந்து விட்டது. ஒரு நாள் அழைத்துப் பக்கத்தில் வைத்துக்கொண்டு பெரிய உபன்யாசம் செய்தார் :

"கதர் வேலை, ஹரிஜன முன்னேற்றம் இவை எது வேணுமானாலும் நீ செய்; நான் தடுக்கவில்லை. இவையெல்லாம் நல்ல வேலைகள்தான். ஆனால் இவைகளினால் நமக்குச் சுயராஜ்யம் கிடைத்து விடும் என்று நினைக்காதே. சரியான அரசியல் வேலைத் திட்டத்தினால் தான் நமக்குச் சுயராஜ்யம் கிடைக்கும். அரசியலோ அழுக்குப் பிடித்த விளையாட்டு! ஆண்பிள்ளைகளாகிய நாங்களே அதில் எவ்வளவோ அலுத்துச் சலித்துப் போகிறோம். ஸ்திரீகள் இதில் கலந்து கொள்வது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. சிலருக்கு ஜெயிலுக்குப் போவதே ஒரு பைத்தியமாகி விடுகிறது. ஜெயிலுக்குப் போகிறதால் மட்டும் சுயராஜ்யம் கிடைத்து விடப்போகிறதா? நீ ஜெயிலுக்குப் போவது எனக்குக் கொஞ்சம்கூட இஷ்டமில்லை."

இப்படியெல்லாம் கண்டிப்பாய்க் கூறிவிட்டு எழுந்து போய் விட்டார். அப்போது தேசம் இருந்த நிலையில், எனக்கு இருந்த ஆத்திரத்தில், இவருடைய வார்த்தை காதில் ஏற போகிறதா? அன்பே என்னை அடக்காதபோது, புத்திமதியா அடக்கப்போகிறது? சிறை சென்றே ஒருவாறு மன நிம்மதி பெற்றேன்.

# 6. ஹரிஜன யாத்திரையில்

“ஹரிஜன யாத்திரை”யில் ஈடுபட்டு மகாத்மா மீண்டும் சென்னைக்கு வந்தார். “ஹரிஜன யாத்திரை” என்ருல், சமூக-மத சம்பந்தமாக ஹரிஜனங்களுக்குள்ள குறைகளைப் போக்குவதற்குப் பிரசாரம் செய்து கொண்டே மகாத்மா தேசமெங்கும் செய்து வந்த யாத்திரைதான்.

அந்த யாத்திரையில் ஒரு சமயம் சென்னையில் கோடம்பாக்கம் ஹரிஜனக் கைத்தொழிற் கல்விச் சாலையில் தங்கியிருந்தார். நான் அங்கே போய் அவரைத் தரிசித்தேன்.

என்னுடைய மன நிலையை உணர்ந்து என்னிடம் மிக்க அனுதாபம் காட்டினுர்.

“உன் தகப்பனுர் விலகிக்கொண்டதால், போற்றக் கூடிய ஒரு தலைவரைக் காங்கிரஸ் இழந்துவிட்டது. அவரை மறுபடியும் காங்கிரஸில் சேரும்படி செய்வதால், நாட்டுக்குப் பெருத்த லாபம் உண்டாகும். உன்னுல் அது செய்ய முடியாதா?” என்றுகேட்டார்.

அதற்கு நான், “அவர் மிகவும் பிடிவாதக்காரர். நான் முயன்று பார்த்தேன்; முடியவில்லை. என்மீது அவருக்கு அதிகமான கோபம். சரியாய்க்கூடப் பேசுவதில்லை” என்றேன்.

“நான் வந்து பேசிப் பார்க்கிறேன்; உன் பொருட்டு நானே வருகிறேன்” என்ருர் காந்தியடிகள். அப்படியே அன்று மாலை ஆறு மணிக்கு எங்கள் வீட்டுக்கு வந்தார்.

அன்று எங்கள் அகத்திற்கு மகாத்மா தனியாகவே வந்தார். எங்கள் வீட்டிலும் என் தந்தை, தாயார், வீட்டுக் குழந்தைகளையும் என்னையும் தவிர, அன்னியர் ஒருவரும் இல்லை.

என் தந்தை 'ட்ராயிங் ரூம்' ஹாலில் காந்தியை வரவேற்றுப் பேசினார். இருவரும் மிக்க அன்போடு க்ஷேம லாபங்களைப் பேசிக்கொண்டனர்.

அரசியல் விஷயமாகப் பேச்சுக் கிளம்பியதும், பழையபடி தம் நீண்ட வாதத்தைத் தொடங்கிவிட்டார் தகப்பனார். வெகு நேரம் காந்தியடிகள் பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்தார். என்ன சொல்லியும் அவரைத் திருப்ப முடியவில்லை மகாத்மாவினாலும்.

எனக்கோ வருத்தம் தாங்க முடியவில்லை. ஒரு ஏழைக்காக ஒரு கடுமையான நீதிபதி முன்பு ஓர் அரசனே நேரில் வந்து பரிந்து வாதாடுவது போலத் தோன்றியது அப்போது.

பிறகு மகாத்மா காந்தி, "உன் தகப்பனாரின் அபிப்பிராயம் இவ்விதம் இருக்கும்போது, நீ அரசியல் விஷயங்களில் பிரவேசித்து அவரை விரோதித்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லையே!" என்றார். "உன்னால் இயன்ற சமூக சேவை செய்து வா. கதர்த் தொண்டு, ஹரிஜன சேவை இவைகளை விடாமல் செய்து வந்தால் போதும்!" என்று எனக்குப் புத்திமதி கூறி வருத்தத்தோடு திரும்பிப் போய்விட்டார்.

## 7. என் "ஹிந்தி" யாத்திரையில்

1934-ஆம் ஏப்ரல் மாதக் கடைசி. நான் ஹிந்தி யாத்திரை-கோஷ்டியில் சேர்ந்து வட நாட்டுக்குப் போயிருந்தேன். டெல்லி, டேராடூன், ஹரித்வார், கான்பூர், லாகூர், அலஹாபாத், காசி முதலிய இடங்களுக்குப் போய் விட்டு, பூகம்பம் ஏற்பட்டிருந்த பீகார் மாகாணத்தின் தலைநகரான பாட்னாவுக்கும் போனேன். அச்சமயம் மகாத்மா அங்கே இருந்தார்.

ஸ்ரீ ஜமன்லால் பஜாஜின் பங்களா ஒன்றில் தங்கியிருந்தார். இவரைத் தரிசித்துவிட்டுக் கல்கத்தாவுக்குத் திரும்ப வேணுமென்று ரயில் ஏறினோம். நாங்கள் புறப்பட்ட வண்டியிலே மகாத்மாவும் வழியிலுள்ள ஒரு சிறு ஊருக்குப் புறப்பட்டார்.

இவர் இறங்க வேண்டிய ஸ்டேஷனுக்கு இரவு 1-30 மணிக்குத்தான் போய்ச் சேர முடியும். அதுவரை இவருடன் இருப்போம் என்று எண்ணி, இவர் தம் பரிவாரத்துடன் ஏறியிருந்த மூன்றும் வகுப்புக் கம்பார்ட்மெண்டில் ஏறிக்கொள்ள அனுமதி கேட்டேன்.

அதற்கு இவர், "இங்கே இந்த வண்டியில் எவருக்கும் படுக்க இடமில்லை. நீ படுத்துத் தூங்க வேணுமென்றால், வேறு வண்டியைத்தான் தேடிப் போக வேணும்" என்றார்.

"உங்களுடன் சிறிது பொழுதாவது இருக்க வேணுமென்றுதான் வந்தேன். நான் படுத்துத் தூங்க விரும்பவில்லை" என்று பதில் சொன்னேன். உடனே தம்



மகாத்மா தங்கிய பழைய அம்ஜத்பாக்.

பக்கத்தில் உட்காருவதற்கு எனக்கு இடம் ஒழித்துக் கொடுத்தார்.

மகாதேவ தேசாய், மீரா பென், பியாரி லால், பிரபாவதி முதலானவர்கள் எல்லாரும் ஸ்டேஷன் வரும்வரை உட்கார்ந்து கொண்டே வந்தார்கள். மகாத்மாவுக்கு மட்டும் சற்றுக் கால் நீட்டிப் படுக்க இடம் ஒழித்துக் கொடுத்தோம்.

இரவு 1-30 மணிக்கு இவர் இறங்கவேண்டிய ஸ்டேஷன் வந்தது. அதற்கு முன்பே இரண்டு மூன்று ஸ்டேஷன்கள் தொடங்கி, “ பிளாட்பார ”ங்களில் பெரிய ஆர்ப்பாட்டமாக இருந்து வந்தது. இவர் ஹரிஜன யாத்திரை போய் வந்த சமயமாகையால், சனுதனிகள் அதிகமாக ஆத்திரம் அடைந்திருந்தார்கள்.

குறித்த ஸ்டேஷனில் கறுப்புக்கொடி-ஆர்ப்பாட்டம் பலத்துவிட்டது. நாங்கள் மகாத்மாவிடம், “ இந்த ஸ்டேஷனில் இறங்கவேண்டாம். அடுத்த ஸ்டேஷனில் இறங்கலாமே ! ” என்று சொல்லிப் பார்த்தோம்.

மகாத்மா கேட்கவில்லை. வண்டி நின்றதும் நிற்காதது மாய் அந்த நள்ளிரவில், மையிருட்டில், கூக்குரலிடும் அந்தக் கறுப்புக் கொடி-ஆசாமிகளின் கோஷ்டி மத்தியிலே குதித்து மறைந்து போனுர். தமக்குப் பின்னுல் ஸ்திரீகள் எவரும் வரக்கூடாதென்றும், அவர்கள் அடுத்த ஸ்டேஷனில்தான் இறங்க வேணுமென்றும் கடுங்கட்டளையிட்டுப் போய்விட்டார்.

“ இவரைத் திரும்பியும் உயிருடன் காணப் போகிறேமா ? ” என்றுகூட எண்ணிவிட்டோம், அந்த இரவிலே. அவ்வளவு அச்சத்துடன் அந்த ஓடும் வண்டியிலே, மனமில்லாமலே, ஓடிப்போனேம் நாங்கள், அவரை அங்கே விட்டு விட்டு.

சென்னை வந்து சேர்ந்ததும், மேலே சொன்ன ஸ்டேஷனில் பெரிய கலாட்டா ஏற்பட்டதென்றும், கல்லடிகூட இருந்ததென்றும் பேப்பரில் படித்தோம். படிக்கவும், காந்தி மஹான் அன்று பிழைத்தது தெய்வாதீனம் என்று தோன்றியது.

இந்த என் ஹிந்தி யாத்திரையிலும் மகாத்மா காந்தியின் நினைவுகளே என் உள்ளத்தில் முக்கிய ஸ்தானம் பெற்று விட்டன. டெல்லி, டேராடூன், ஹரித்வார், காசி, பிரயாகை முதலான சரித்திரப் பிரசித்தமும் புராணப் பிரசித்தமுமான ஸ்தலங்களிலே நான் கண்ட காட்சிகளைக் காட்டிலும், அந்த நள்ளிரவிலே—அந்த மை இருட்டிலே—மகாத்மா குதித்து விரோத மனோபாவமும் மதாவேசமும் கொண்டிருந்த அந்த ஜனக் கடலில் மறைந்து போனாரே, அந்தக் காட்சி என் உள்ளத்தை அப்படியே உருக்கி விட்டது. அத்தகைய வீரம், போர் வீரத்தையும் பேடித்தனம் என்று சொல்லும்படியாக, அவ்வளவு உயரத்திலே ஜொலிக்கும் ஒரு நக்ஷத்திரம் போல் மிளிர்ந்து, நமது தற்கால வாழ்க்கையாகிய கார் இருளிலும் வழிகாட்டுகிறதல்லவா ?



# 8. பம்பாய்க் காங்கிரஸ்

1934-ஆ அக்டோபர் மாதக் கடைசியில் பம்பாயில் காங்கிரஸ் நடந்தது. தேச ஸேவிகைகள் என்ற நிலையில், ஸ்ரீமதி ஜானம்மாள், *கோதைநாயகியம்மாள்—இவர்களுடன் நானும் அந்தக் காங்கிரஸுக்குப் போயிருந்தேன். இதுதான் நான் பார்த்த முதல் காங்கிரஸ்.

நாலு நாளைக்கு முன்னமே போய்விட்டோம். பம்பாய் "ஒர்லி" கடற்கரையில் பிரமாண்டமான ஒரு புதிய நகரமே நிர்மாணிக்கப் பட்டிருந்தது.

நாங்கள் தங்குவதற்காக ஓலைக் கீற்றால் முடைந்த தட்டி-அறைகள் கொடுத்திருந்தார்கள். படுக்க நாடாக் கட்டில். ஸ்நானம், போஜனம் இவற்றுக்கெல்லாம் தனி இடங்கள். டெலிகேட் டிக்கட்டு மூன்று ரூபாயும், அறை வாடகை ஆறு ரூபாயும், போஜன சாலைக்கு வேறு கட்டணமும் கொடுத்தோம். பணம் வைத்துக்கொள்ள பாங்கு, ஆஸ்பத்திரி, தபால்-தந்தி ஆபீசுகள் முதலியனவும் காங்கிரஸ் நகருக்குள்ளேயே அமைக்கப் பட்டிருந்தன.

ஸ்ரீமதி கமலாதேவி, சோபியா ஸோம்ஜி இவர்களின் தலைமையில் இந்துஸ்தான் ஸேவாதள ஸ்திரீ-வாலண்டியர்கள் எங்கள் சௌகரியங்களையெல்லாம் வெகு நன்றாய்க் கவனித்துக்கொண்டனர்.

காங்கிரஸ்-பொதுக்கூட்டங்கள் பிரமாண்டமான ஒரு மைதானத்திலே நடைபெற்றன. 'டெலிகேட்டுகள்' உட்கார, மைதானத்தை மாகாண வாரியாகப் பிரித்து வசதி செய்திருந்தார்கள். எங்கும் ஒலி பரப்புக் கருவிகள்.

* 'ஜகன் மோகினி' ஆசிரியை; எங்களுடன் சிறை வாசம் செய்தவர்.

மத்தியில் துவஜ ஸ்தம்பம். தலைவரும் மற்றப் பிரமுகர்களும் ஏறி நின்று பேசுவதற்கு உயரமான படிக்கட்டு மேடை (tower).

அந்தக் காங்கிரஸின் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத். சற்றேறக்குறைய எல்லா மாகாணத் தலைவர்களும் அந்தக் காங்கிரஸுக்கு வந்திருந்தனர்.

காந்தியின் முகாமும், தலைவர் முகாமும் காங்கிரஸ் நகரின் மத்தியில் பலத்த காவல் சூழ அமைக்கப்பட்டிருந் தன. அவற்றை அடைய வேண்டுமானால், ஆறு வாசல் களைத் தாண்டித் தாண்டிச் செல்லவேண்டும். அதற்குத் தனி அனுமதிச் சீட்டு வேண்டும். அபேதவாதக் கட்சியினர் பலத்த ஆர்ப்பாட்டம் செய்யப் போவதாய் வதந்தி உலாவியதால், அவ்வளவு பந்தோபஸ்து.

அந்த நிலையில் எந்நேரமும் காந்தியின் அருகிலே இருக்க வேண்டி இரண்டு அனுமதிச் சீட்டுகளை நாங்கள் கேட்டுப் பெற்றுக்கொண்டோம்.

அங்கே பெரிய, பெரிய தலைவர்கள் மிக்க கம்பீரமாக வருவார்கள்; காந்தியைக் கண்டவுடன் அடங்கி விடுவார்கள். வணக்கமாகச் சமீபித்து இவர் அபிப் பிராயத்தைக் கேட்டுக்கொண்டு போவார்கள்.

காங்கிரஸ்-கூட்டங்களில் மகாத்மா பிரசன்னமாக இல்லாவிட்டால், மற்றப் பெரிய தலைவர்கள் பிரசன்னமா யிருந்தும் அந்தக் கூட்டம் சோபை அற்றே போகும். எனவே, மகாத்மா நூல் நூற்பது, உண்பது முதலிய காரியங்களைக்கூடக் காங்கிரஸ் மத்தியிலேயே இருந்து கொண்டு செய்ய வேண்டியிருந்தது.

அந்தக் காங்கிரஸ்-நகரில் கூடியிருந்த ஆயிரக் கணக்கான மக்களுடைய பேச்சிலும் நினைவிலும்

முடிசூடா மன்னராக மகாத்மா காந்தி ஒருவர்தான் குடி புகுந்திருந்தார்.

எனினும் பழைய மகாத்மாவாகத் தான் இருந்தார், என்னைப் போன்றவர்களுக்கு. எவ்வளவு அன்புடன் எங்களை நோக்கிப் பேசி வரவேற்ருர் !

*　　　*　　　*

நான் சம்பந்தப்பட்ட வரையில் மகாத்மாவை மேலும் நன்ருகத் தெரிந்துகொள்வதற்கு ஒரு சந்தர்ப்பமாக உதவியது பம்பாய்க் காங்கிரஸும். இன்றும் அந்தக் காங்கிரஸை நினைத்துப் பார்க்கும்போது, சிக்கலான அரசியல்-பிரச்னைகளைக் குறித்த விவகாரங்கள் நினைவிற்கு வரவில்லை. அந்தச் சிக்கல்களையெல்லாம் மகாத்மா எப்படித் தீர்த்து வைத்தார் என்ற விவரங்களும் ஞாபகத்தில் இல்லை. ஆனல், அந்த ஹிருதயத்திலே என்னைப் போன்றவர்கள் விஷயத்திலும், எவ்வளவு கருணையும் அன்பும் ததும்பிக்கொண்டிருந்தன !— என்பதை நான் ஒருபோதும் மறக்க முடியாது.





ஆறுதல் அளிக்கும்
அந்தப் பொக்கை
வாய்ச் சிரிப்பு
(பக்கம் 55)

# 9. வர்தா ஆச்ரம நினைவுகள்

பம்பாய்க் காங்கிரஸிலிருந்து திரும்பியதும் உடனே எப்படியோ முரண்டு செய்து வர்தாவுக்குச் சென்றேன். காந்தி ஆச்ரமத்தில் கொஞ்ச காலமாவது வசிக்க வேணுமென்ற ஆவல் வெகு காலமாக எனக்கு உண்டு. அதைப் பூர்த்தி செய்ய அப்போதுதான் வசதி கிடைத்தது

தகப்பனாரே கூடவந்து என்னை ஆச்ரமத்தில் விட்டுச் சென்றார். திரும்பிப் போகும்போது அவருக்குக் கண்ணீர் வந்துவிட்டது. அன்றுதான் மகாத்மாவும் நானும், என்மீது தகப்பனாருக்கு இருந்த அன்பின் ஆழத்தை உணர்ந்து கொண்டோம்.

"நீங்கள் கவலைப்பட வேண்டாம். உங்கள் அம்புஜம் இங்கே சிலநாள் இருக்கட்டும். இவளை நான் பத்திர மாய்ப் பார்த்துக் கொள்ளுகிறேன். எனக்கு அனேக சுவீகார புத்திரிகள் உண்டு. அவர்களைப்போல இவளும் ஒருத்தி என்று எண்ணிக்கொள்ளுங்கள். இன்னும் ஒரு மாதத்தில் அனுப்பி விடுகிறேன். நீங்கள் அதிருப்திப் படும்படி ஒருநாளும் நடந்துகொள்ள மாட்டாள். இதை உங்கள் மனைவியாருக்கும் தெரிவியுங்கள். இவள் உங்கள் மனைவியாருக்கும் உங்களுக்கும் என்றும் உண்மைப் புதல்வியாகவே யிருப்பாள்" என்று சொல்லி என் தகப்பனாரைத் தேற்றி யனுப்பினார்.

அரசியல் - விஷயங்களில் மகாத்மாவுக்கு எவ்வளவு ஊக்கம் இருந்ததோ, ஏறக்குறைய அவ்வளவு ஊக்கம் தமது நண்பர்களின் குடும்ப விஷயங்களிலும் உண்டென்று தோன்றுகிறது. அரசியலில் ஏற்படும் அபிப்பிராய பேதங்கள் நட்பைப் பாதிக்கும்படி விடுவது மகாத்மாவின் இயல்பன்று.

மகாத்மா என் விஷயத்தில் காட்டிய ஊக்கம், என்மீது கொண்ட அன்பிற்குக் காரணம், நான் அவருடைய நண்பரின் புதல்வி என்பதே. இந்த விஷயத்தைத் தாமே பல முறை விளக்கியிருக்கிறார்.

நான் ஆச்ரமத்தில் இருந்தவரை, ஒரு புதல்வி தன் தந்தையின் அன்பார்ந்த கண்காணிப்பில் இருப்பது போன்ற உணர்ச்சியுடனே இருந்துவந்தேன்.

தமக்கு வந்த பழங்களை யெல்லாம் எனக்குத் தந்து உண்ணச் சொல்லுவார். ஒரு சமயம் இவருக்கென்று இருந்த தேனையெல்லாம் நானே சாப்பிட்டு விட்டதாகவும் அறிந்துகொண்டேன்.

## என்னைப் பற்றியும் கவலை!

வேறொரு சமயம் நான் தரையிலே புஸ்தகத்தை வைத்துக்கொண்டு மண்டியிட்டுக் குனிந்து எழுதுவதைப் பார்த்துவிட்டு, ஸ்ரீ பஜாஜுக்குச் சொல்லி யனுப்பி எனக்கென்று ஒரு சிறு சாய்வு-மேஜை தருவித்துக் கொடுத்தார்.

அன்று காந்தி அதைக் கொடுப்பதற்காக என்னை அழைத்து வரச் சொன்னபோது, "நாம் என்ன குற்றம் செய்துவிட்டோமோ?" என்ற திகிலுடன் இரைக்க இரைக்க ஓடோடியும் சென்றேன், மகாத்மா இருந்த மாடி ஹாலுக்கு. சென்று நடுங்கிக்கொண்டே இவர் முன்பு நின்றேன்.

இவர் என்னைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, "அம்புஜம்! இந்த மேஜையை உனக்காக வரவழைத்திருக்கிறேன். இனிமேல் தரையில் புஸ்தகத்தை வைத்துக் கவிழ்ந்துகொண்டு எழுத முடியாது!" என்றார். அதைக் கேட்டு எனக்கு உண்டான வியப்பிற்கு எல்லை இல்லை.

நான் வர்தாவுக்குச் சென்றது கடுமையான குளிர் காலம்—நவம்பர் மாதம். மகாத்மா அப்போது வர்தா மகிளாச்ரமத் தோட்டத்திலுள்ள ஒரு பங்களாவில் வசித்து வந்தார். கீழ் ஹாலில் விநோபாபாவே முதலியவர்கள் இருந்தனர். மேல்மாடி ஹாலில் மகாத்மா, கஸ்தூரிபா, மீராபென், அம்துல் முதலான சகோதரிகள் இருந்தனர்.

நான் வர்தாவுக்குப் போன புதிசு. அன்று மாலை பலத்த காற்றுமழை. நாங்கள் மகிளாச்ரமக் கட்டடத்தின் மாடியிலுள்ள தாழ்வாரத்தில் ஒண்டிக்கொண் டிருந்தோம். என்னுடன் ஆச்ரமத்துச் சகோதரிகள் சிலரும் இருந்தனர். உட்புற ஹாலில் மஹாத்மா யார் யாருக்கோ பேட்டி கொடுத்துக் கொண் டிருந்தார்.

இளம் பிராயத்திலிருந்தே மழையென்றால் எனக்கு ஆகாது. ஜலதோஷம் பிடித்துக்கொள்ளும். என் தகப்பனாரும், "மழை, மழை!" என்று என்னை வெளியே போக விடமாட்டார். ஈரத்தில் கால் வைத்து நடமாடக் கூடாது!—என்று வீட்டிலும் வீட்டைச் சுற்றிலும் கல்லுக் கட்டடமாகவே அமைத்திருந்தார்.

அந்த மாலை யிருட்டையும் மழையையும் குளிர்ந்த வாடையையும், வர்தா ஆச்ரமத்தைச் சுற்றியிருந்த சகதியையும் எண்ண எண்ண, எனக்கு உள்ளுக்குள்ளே கொஞ்சம் திகில் உண்டாகிவிட்டது. உடனே வீட்டின் ஞாபகமும், 'அப்பா, அம்மா'வின் ஞாபகமும் வந்து விட்டன. 'ஹோம்-ஸிக்' என்பார்களே, அந்த நோய்,—வீட்டைப் பற்றிய ஏக்கம்—வந்து விட்டதென்றே தோன்றியது. கண்களில் நீர்கூடத் துளித்தது!

இதற்குள் இரவு 7-30 மணி (புது மணி அல்ல) ஆகிவிட்டது. பாபுவைப் பேட்டி காண வந்தவர்களெல்லாம் போய்விட்டார்கள்.

"லீலாவதி! அம்புஜம்! அந்த மழையில் அங்கே என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டது பாபுவின் குரல். எழுந்து உள்ளே போனோம். அங்கே கஸ்தூரிபா, பிரபாவதி, அம்துல், மீரா அனைவரும் இருந்தனர். 'ஹரிகேன்' விளக்கு ஏற்றி வைத்துக் கொண்டு, நாங்கள் அனைவரும் ஏதேதோ புஸ்தகம் படிக்கவும், நூல்நூற்கவும் தொடங்கி விட்டோம். மகாத்மாவும் ஏதோ எழுதிக்கொண்டிருந்தார்.

வெளியே, ஊதை-வாடையும் மழையும் அப்படியே அசாத்தியமாக இருந்தும்கூட, உள்ளே "கம்"மென்று கணப்பின் அருகில் இருப்பது போன்ற ஓர் உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. மனசில் உதித்த கிலி மாயமாய்ப் போய்விட்டது. அந்தக் குளிர்ந்த இரவு அப்பால் சுகமாகவே கழிந்தது.

## ஆச்ரம வசதிகள்

காந்தியின் சுகாதார முறைகளைப் பற்றிய அபிப்பிராயங்கள் யாவரும் அறிந்தனவே. வர்தா ஆச்ரமத் தோட்டம் பெரிது. அதிலே ஒரு கோடியில் தான் கக்கூஸ் தட்டிகள் கட்டியிருக்கும். இரவு நேரங்களிலும் அங்கே தான் போக வேண்டும்.

சென்னையில் நமது வீடுகளிலோ எத்தனையோ கதவுகள், இரவு நேரங்களில் கெட்டித் தாழ்ப்பாள் இடப்பட்டு எவ்வளவோ பந்தோபஸ்தாய் இருக்குமே! வர்தா ஆச்ரமத்தில் எந்தக் கதவுக்கும் தாழ்ப்பாள் கிடையாது.

வாயிலெனப் பூட்டென்ன
மதிலென்ன வழங்கும்
மனையென்னும் பெயர்க்குரிய
மரபொன்றும் இன்றி,
நின்ற தனியிடம்

என்று "மனோன்மணீய" ஆசிரியர் ஒரு முனிவனுடைய ஆச்ரமத்தை வர்ணித்திருக்கிறார் அல்லவா? அந்த ஞாபகம் வரத்தான் செய்கிறது, காந்தி ஆச்ரமத்தை இன்று நினைத்துப் பார்க்கும் போதும்.

ஆச்ரம வாசிகளின் பெட்டி பேழைகளும் திறந்தே யிருக்கும். அவர்களுடைய பெட்டியிலோ, உடம்பிலோ ஒரு செம்பால் அடித்த நகையோ, செல்லாக் காசோ கிடையாது.

அவர்களுக்கு உள்ள காசு சொத்து எல்லாம் ஆச்ரமச் சொத்து; ஆச்ரம கஜானாவைச் சேர்ந்தவை. ஆச்ரமமே, உண்டி அளித்து அவர்களைக் காக்கும் தாய். அவர்களுடைய உடைமைகள் எல்லாம் இரண்டு கதர்த் துணிகள்; போஜனம் செய்வதற்கான சாதாரணத் தட்டு, கிண்ணங்கள்; ஒரு வாளி; நூல் நூற்க ஒரு ராட்டு; படிக்கச் சில புஸ்தகங்கள்; படுக்கவோ ஒரு சாமானியப் படுக்கை—இவ்வளவு தான்.

உறங்கஅவர் பணிப்பாயும்
பூஅணையும் உன்னார்;
உண்ணஎனில் பாலமிழ்தும்
ஒன்றாக மதியார்!

என்ற அதே "மனோன்மணீய" ஆச்ரம வர்ணனை தான் மறுபடியும் ஞாபகத்திற்கு வருகிறது.

இந்த உடைமைகளுக்கு எந்தத் திருடன் வருவான்? எனவே, நாங்கள் இரவு நேரங்களிலும் எழுந்தால் தோட்டத்துக்குத்தான் போவோம்,—ஆம்; அந்தக் கோடியில் உள்ள தோட்டத்துக்குத்தான் போவோம். அச்சம் தோன்றாது!

சென்னைமாநகர வீடுகளில்கூட இரவு நேரத்தில் சற்று ஓசைப் பட்டாலும் நெஞ்சு திடுதிடு என்று

அடித்துக்கொள்ளும். ஏதோ ஒரு நிழலைக்கூட ஒரு திருடனோ என்று எண்ணத் தொடங்கிவிடுவோமே!

ஒரு சமயம் வர்தாவிலே இரவு நேரத்தில் அடுத்தடுத்து நரி ஊளையிட ஆரம்பித்தது. எனக்கு உள்ளுக்குள்ளே பயம். நள்ளிரவில் அந்தத் தோட்டத்துக்கு எப்படி எழுந்து போவது?

"நரி கடிக்குமோ மனுஷ்யாளை?" என்று மட்டும் காந்தி அடிகளை மெள்ளக் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

அப்படியிருந்தும் அவரிடம், "இரவு நேரங்களுக் காவது சமீபத்திலேயே வசதி செய்து தரவேணும்" என்று கேட்கத் துணியவில்லை என் நெஞ்சம். ஆனால், என்னைப்போலவே மற்றவர்கள் பயந்ததாகத் தெரிய வில்லை.

## ஆச்ரம நியமங்கள்

நான் வந்து பத்துப் பதினைந்து நாளுக்குப் பிறகு ஜானம்மாளும் ஆச்ரமத்திற்கு வந்து சேர்ந்தார். நாங்கள் இருவரும் மகாத்மாகூடவே இருந்து வந்தோம்.

ஆச்ரமவாசிகளை எழுப்பக் காலை 4 மணிக்கு மணி அடிப்பார்கள். பிறகு 4-30 மணிக்குப் பிரார்த்தனை மணி அடிப்பார்கள். அந்தக் கடுங்குளிரிலும் மகாத்மா இருக்கும் மாடியில், வெட்டவெளியில், மங்கலான தீப ஒளியிலே, பிரார்த்தனை நடக்கும்.

நாங்கள் எல்லோரும் கம்பளிப் போர்வையால் தலை, காது, உடல், பாதம்வரை சுற்றிப் போர்த்துக்கொண்டு பிரார்த்தனைக்கு உட்காருவோம். எங்கும் அமைதியும் நிசப்தமும் குடி கொண்டிருக்க, சுமார் அரைமணி நேரம்

காலைப் பிரார்த்தனைக்கான பாடல்களை மெதுவாக ஒன்றுகூடிச் சொல்லுவோம். பிறகு சற்று நேரம் மௌனப் பிரார்த்தனை நடக்கும்.

மகாத்மா எழுந்ததும், அந்த மௌனம் கலைந்து அவரவர் வேலைக்குப் பிரிந்து போவோம். காலை 7 மணிக்கு உண்டி : ஒவ்வொருவருக்கும் ஒரு பெரிய டம்ளர் பாலோ, கோதுமைக் கஞ்சியோ கிடைக்கும்.

ஆச்ரமத்து வேலைகளை அங்குள்ள யாவரும் செய்து வந்தனர். சிலருக்குச் சமையலறை வேலை. சிலருக்குக் கட்டடங்களையும் அறைகளையும் பெருக்கிச் சுத்தம் செய்யும் வேலை. சிலர் கோதுமை அரைப்பார்கள். பெரிய பெரிய "சக்கி"யில் (எந்திரத்தில்) சிலர் பஞ்சடித்துக் கொட்டை நீக்குவர். சிலர் தோட்ட வேலை செய்வர். சிலர் ஆச்ரமத்து ஆபீஸ் வேலையைக் கவனிப்பார்கள்.

தினசரி எல்லோரும் ஏதேனும் வேலை செய்வது ஆச்ரமத்துக் கட்டாயத் திட்டம். ஆச்ரம வாசிகளுக்கு வேலைத் திட்டம் போடுவது, சமையல்-திட்டம் சொல்வது, மகிளாச்ரம மாணவிகளின் படிப்புமுறையைத் திட்டஞ் செய்வது, அவர்களுடைய குறைபாடுகளுக்குச் செவி சாய்ப்பது, புத்திமதி கூறுவது, இவை போன்ற ஒவ்வொரு சாதாரணச் சிறு காரியம்முதல் நுட்பமான பெரிய அரசியல் விஷயம் வரையில் தினசரி கவனிப்பது, ஆலோசனை கூறுவது—இவையெல்லாம் மகாத்மாவின் அலுவல்கள்.

இவை தவிர, நோயுற்ற ஆச்ரம வாசிகளுக்கு வைத்தியம் செய்வது, கவனித்துப் பணிசெய்வது, அந்தப் பொக்கைவாய்ச் சிரிப்பினாலேயே ஆறுதல் அளிப்பது, உத்ஸாகப் படுத்துவது, பணிசெய்யத் தூண்டுவது—அந்தப் பார்வையினாலேயே தைரியம் அளிப்பது—இவையும் மகாத்மாவின் அலுவலாகும்.

## சூத்திரதாரி

மேலும் இந்தியாவின் பல மூலைகளிலிருந்தும் வந்து குவிந்து கொண்டிருந்த கடிதங்களுக்கு ஒன்று தவறாமல் விடை எழுதுவதும், இவருடைய முக்கிய அலுவல்களில் ஒன்று. இவருக்கு இருந்த கடிதப் போக்கு வரத்தின் தன்மை இத்தகையது எனக் கூற முடியாது.

சில கடிதங்கள், பொது ஸ்தாபனங்களின் நடவடிக்கையைப் பற்றி இவர் அபிப்பிராயம் கேட்பவையாக இருக்கும். சில, குடும்ப சம்பந்தமாய் யோசனை கேட்பவை யாக இருக்கும். சில, அரசியல் சம்பந்தமானவை. சில, சமூக விஷயங்களைப் பற்றியிருக்கும். மத விஷயங்களைப் பற்றி அபிப்பிராயம் கேட்கும் கடிதங்களாக இருக்கும் சில. இலக்கிய சம்பந்தமான கடிதங்களும் உண்டு. வெளி நாட்டுக் கடிதங்களுக்கும் குறைவில்லை.

இவற்றை யெல்லாம் மகாதேவ தேசாயை நேரில் படிக்கச் சொல்லிக் கேட்பார் காந்தியடிகள். தாமே பதில் எழுதுவார். பிறராலும் எழுதுவித்து அனுப்பி வைப்பார். அந்த நிலையில், மகாத்மா காந்தியை வர்தாவிலிருந்து கொண்டே உலகத்தின் ஒரு பகுதியை ஆட்டி வைத்த சூத்திர தாரி என்றே சொல்லத் தோன்றியது.

## நல்ல பயிற்சி

மீரா பென் போன்ற சில ஆங்கிலச் சகோதரிகள் கிணற்றிலிருந்து தண்ணீர் இழுத்து முரட்டுக் கதர்த் துணிகளைத் துவைப்பது, அறை கூட்டுவது, பாத்திரம் துலக்குவது, சமைப்பது போன்ற வீட்டு வேலைகளில் தினசரி ஈடுபடுவார்கள். அம்துல் பென், பிரபாவதி போன்ற இந்தியப் பெண்கள் மகாத்மாவின் பக்கத்தில் இருந்துகொண்டு கடிதப் போக்கு வரத்தைக் கவனிப்பார்கள்; அரசியல்-குறிப்புக்களை எழுதுவார்கள்; ஆச்ரம வாசிகளுக்குப்பாடம்

கற்பிப்பார்கள். இவை யெல்லாம் ஆச்ரமத்திலே எனக்கு முதலில் ஆச்சரியமான காட்சிகளாகவே யிருந்தன.

இருபாலாருள்ளும் காணப்படும் சில குறை பாடுகளைத் தீர்ப்பதற்கு இந்த வேலைப் பழக்கம் ஒரு நல்ல முறையாகவே யிருந்தது. குடும்ப வேலை, சமூக வேலை, இரண்டிலும் பெண்கள் தேர்ச்சி பெறுவதற்கும் இது ஒரு நல்ல பயிற்சி.

## ஆச்ரமச் சாப்பாடு

சாதம், முரட்டு ரொட்டி, பருப்பு, அரை உப்புப் போட்ட கறிவகை ஒன்று, தயிர்—இவையே காலைப் பத்து மணி உணவு. உறைப்பு, புளிப்பு, தாளிப்பு முதலியன இல்லவே யில்லை.

ஜானம்மாளுக்கு இந்த ஆகாரம் கட்டோடு ஒத்துக் கொள்ளாமலே போய் விட்டது. தனியாக "மதராஸ் ரஸம்" மட்டும் வைத்துச் சாப்பிட அவருக்குப் பிரத்தியேக அனுமதி கிடைத்தது.

எனக்கும் ஆச்ரமச் சாப்பாடு அவ்வளவாக ஒத்துக் கொள்ளவில்லை. ஆனால் எனக்கு 'கச்சா கானு'—அதாவது 'சமைக்கப்படாத உணவு' விதித்தார் மகாத்மா. அப்பொழுது அங்கே பலர் இந்த முறையைத் துவக்கி யிருந்தனர். காந்தியடிகளின் உணவுப் பரிசோதனைகளில் ஒன்றாகும் இது.

காய்ச்சாத சுத்தமான டெயரிப் பால் (புளித்துப் போகாமலிருக்கக் குளிர்ந்த ஜலத்தில் வைத்திருக்க வேண்டும்), ஆப்பிள், சாத்துக்குடி ஆரஞ்சு முதலான பழ வகைகள், சர்க்கரைக்குப் பதில் தேன், கறி வகை களில் பச்சையாகச் சாப்பிடக்கூடியவை, அதாவது காரெட்டு, காபேஜ், முள்ளங்கி, சீமைத் தக்காளி,

பருப்புக்கீரை—இவைதான் எங்கள் ஆகாரம். புளிப்பான பழங்களுக்கு உப்பைத் தொட்டுக் கொள்வது, புளிப்புக்காக எலுமிச்சம் பழம் சேர்ப்பது—இவையும் உண்டு.

பழம், காய்வகைகளை 'பொட்டாஷ் பெர்மாங்கனேட்' என்னும் மருந்து கலந்த நீரிலே முதலில் கழுவிப் பிறகு சுத்த ஜலத்தில் அலம்பி, நன்ருய்க் கடித்து மென்று தின்ன வேண்டும். இவைகளைச் சாப்பிட அரை மணிக்கு மேல் பிடிக்கும். பச்சைப் பாலில் கொஞ்சம் எலுமிச்சம் பழ ரஸம் பிழிந்து, வெயிலில் வைத்துத் தயிராக உறைத்து அதையும் உண்டு வந்தோம்.

இவ்வித ஆகாரத்திஞல் உடம்புக்கு யாதொரு கெடுதியும் உண்டாகவில்லை. மலச் சிக்கலும் இல்லாமலிருந்தது. ஆனுல் எவ்வளவுதான் சாப்பிட்டாலும் இவை அன்னத்தைப்போல் பசி ஆற்றவில்லை எனக்கு. சென்னைக்கு வந்த பிறகு, அந்த ஆகார நியமம் உடம்பிற்கு ஒத்துக்கொள்ளாததால் அதை விட்டு விட்டுப் பழையபடி மதராஸ்-ரஸத்திற்கும் காப்பிக்கும் திரும்பி விட்டேன்!

## நான் தேறின ஒரு பரீட்சை

இந்த ஆகார நியமத்தில் இருக்கும்போது, ஒரு முறை (தீபாவளி சமயம்) என் தாயார் எனக்கென்று சில தின் பண்டங்களைத் தயாரித்து ஆச்ரமத்திற்கு அனுப்பியிருந்தார். அந்தப் பார்சல், பாபுவின் முன்னிலையில் கொண்டு வந்து திறக்கப்பட்டது. அதில் சில பர்பிகளும் முறுக்கு, சீடைகளும் இருந்தன.

"இவற்றைக் கண்டவுடன் உன் நாக்கில் நீர் ஊறுகிறதா? தின்ன வேணுமென்று அவா உண்டாகிறதா? உன் அம்மா பிரியத்துடன் அனுப்பிய பட்சணமாச்சே!"

என்று என்னைக் கேலி செய்தார் பாபு. அதற்கு நான், "அவை வேண்டாம்: தின்ன விருப்ப மில்லை!" என்று சொல்லிவிட்டேன்.

"அப்படியானால், இவைகளை அப்படியே கொண்டு போய் மகிளாச்ரமக் குழந்தைகளுக்குக் கொடுத்து விடு!" என்றார். அப்பால் என்னுடன் வந்த பிரபாவதியை அழைத்து, "இவள் ஒரு துண்டுகூட ருசி பார்க்க வில்லையா?" என்று கேட்டார். இல்லையென்று தெரிந்த வுடன் என்னை அழைத்து, "நீ நாவை அடக்கத் தெரிந்தவள்!" என்று பாரர்ட்டினர்.

## நாங்கள் செய்தது சொற்பம்

ஜானம்மாளும் நானும் கூடிய மட்டும் ஆச்ரம வேலையில் பங்கெடுத்துக் கொள்ள முயன்றோம். ஆனால் சமையல் அறைக்கு மட்டும் போகவில்லை. ஆச்ரமத்துப் பெண்களுக்கு இங்கிலீஷ் பாடம் கற்பிப்பது, தோட்டம் கூட்டுவது முதலான வேலைகளையும் செய்து வந்தோம்.

பழக்கமில்லாததால், ஸ்நானம், துணி துவைப்பது, எங்கள் போஜன பாத்திரங்களைச் சுத்தி செய்வது முதலான சொந்த அலுவல்களுக்கே நேரம் போதாமல் இருந்தது. ஆகையால் நாங்கள் செய்த வேலை சொற்பம் என்றே சொல்ல வேண்டும்.

## காலையிலிருந்து

காலை எட்டு மணிக்குத் தினந்தோறும் துளஸீ ராமாயண பாடம் நடக்கும். வினோபா பாவே தான் தம்புரா சுருதியுடன் ராமாயணப் பாடல்களைப் பாடுவார். நாங்கள் இரண்டாம் முறை அவர் கூடப் பாடுவோம். மகாத்மாவும் மெதுவாக வாய்க்குள் பாடுவார்.

இந்தப் பாடல்களின் ஒலியும், ஆச்ரமத்துப் பெண்கள் காலை வேளையிலே பள்ளியில் பயின்று வந்த ஹிந்தி சங்கீதத்தின் இன்னிசையும், இன்றும் என்காதில் ஒலிப்பதுண்டு. ஆம்: சிற்சில சமயங்களில் அமைதியான தென்றல் வீசும் காலை வேளைகளிலே அந்த ஒலிகள் அப்படியே அந்தக் காலை இளங் காற்றிலே மிதந்து வருவதுபோலத் தோன்றுவதுண்டு.

பகல் பன்னிரண்டு மணி தொடங்கி அரைமணி நேரம் வரை, மகிளா வித்தியாலய ஹாலில் நூல் நூற்கும் வேள்வி நடக்கும். எல்லாரும் ஒன்றுகூடி, சர்க்கா அல்லது தக்ளி வைத்துக்கொண்டு மௌனமாக நூற்றுக் கொண்டிருப்பார்கள்.

நாள்தோறும் இந்த இரண்டு காரியங்களும் பக்தி சிரத்தையுடன், உள்ளும் புறமும் சாந்தம் நிலைபெற, வெகு அழகாக நடைபெறும்.

## மாலை நியமங்கள்

மாலை அஞ்சு மணிக்கு அதே மாதிரி இராப் போஜனம். இடைவேளையில் சிறுவர் சிறுமிகளுக்கு வாழைப் பழம், சோள பிஸ்கோத்து இவற்றில் ஏதேனும் கொடுப்பார்கள்.

மாலை 7 மணிக்குப் பிரார்த்தனை வெகு அமைதியாக நடைபெறும். கீதா பாடத்திற்குப் பிறகு முடிவில் தம்புரா சுருதியுடன் ஏதேனும் ஒரு பாட்டுப் பாடுவார்கள்.

அத்தகைய பாடல்களில் மகாத்மாவுக்கு மிகவும் பிரியமான பாட்டு, “அந்த ஹரி, பாஞ்சாலியின் துகிலை வளர்த்தவர்; பாண்டவருக்குத் துணை புரிந்தவர்; தம்மைப் பக்தியுடன் துதிப்பவர் ஒருநாளும் தங்கள் மானத்தை

இழக்கும்படி விட்டுவிட மாட்டார்!" என்னும் கருத்து அமைந்த குஜராத்திப் பாட்டு.

பிரார்த்தனை முடிந்ததும் பள்ளிக்கூடங்களில் செய்வதுபோல ஆஜர்ப் பட்டி எடுப்பதுண்டு. அப்போது அவரவர் அன்று நூற்ற "நூல் சிட்ட"த்தின் கணக்கைத் தெரிவிக்க வேண்டும். இதுதான் ஆச்ரமத்து ரிஜிஸ்தர்.

## மன்னிக்க மாட்டார்!

ஆச்ரமத்தில் வசிப்போர் எந்த வேலைகளில் தவறினாலும் மகாத்மாவின் மன்னிப்பை எளிதில் பெற்று விடக்கூடும். ஆனால் காலை 4-30 மணிப் பிரார்த்தனைக்கு எழுந்திராமலும், தினசரி நூல் நூற்காமலும் இருப்பதை மட்டும் இவர் எளிதில் மன்னிக்க மாட்டார். ஆகையால் இந்த இரண்டு விஷயங்களிலும் வெகு ஜாக்கிரதை யுடன் அனைவரும் நடந்துகொள்வார்கள்.

## மகாத்மாவின் தினசரியில் ஒரு பகுதி

மகாத்மா, அதிகாலை மூன்று மணிக்கே எழுந்து விடுவார். அதுமுதல் இரவு ஒன்பது மணிவரை, கால அட்டவணைப் பிரகாரம் அலுவல்கள் இடைவிடாமல் நடை பெறும். பகல் 11 மணி முதல் 12 மணி வரையில் சற்று இளைப்பாறுவார்.

அந்தக் கடுங்குளிரிலும் திறந்த வெளியிலேதான் படுக்கை. இவருக்காவது கட்டிலுண்டு. கஸ்தூரிபா, மீராபென் முதலானவர்களுக்கோ அதுவும் இல்லை. காலையில் எழுந்தால், படுக்கையெல்லாம் பனியால் நனைந்து பிழியும்படி யிருக்கும்.

காலையும் மாலையும் தவறாமல் ஒரு மணிநேரம் உலாவச் செல்வார் மகாத்மா. இவருடன் கூடப் பிரபல தேசத்

தலைவர் முதல் ஆச்ரமக் குழந்தைவரை, அனைவரும் உலாவச் செல்வார்கள். அப்பொழுதுதான் ஒவ்வொருவருக்கும் காந்திஜியுடன் பேசச் சந்தர்ப்பம் கிடைக்கும்.

காந்தி நடக்கும் நடையே தனி நடை. அதைப் பின்பற்ற ஆச்ரம வாசிகளாலேதான் முடியும். இவருடைய சாதாரண நடை நம்முடைய ஓட்டம். ஓட முடியாதவர் வழியில் வெகுதூரம் பின்தங்க வேண்டியதுதான்!

கரடு முரடான வயல் வரப்புக்கள் வழியாகத் தடி ஊன்றி நடக்கக்கூடிய—முழத் துண்டு உடுத்திய—ஒரு பொக்கை வாய்த் தாத்தாவைப் பின்பற்றி ஒரு பர்லாங்கு தூரம்வரை ஆண், பெண், பாலர் அடங்கிய கூட்டம் ஒன்று—பித்தர் கூட்டம் என்றுகூடச் சொல்லிவிடலாம்—ஓடுவதென்றால், அது எங்கும் காணக் கிடையாத காட்சியல்லவா?

## உபயோகமான தேகாப்பியாசம்

நான் போன சமயம் ஆச்ரமத்துக்குக் கப்பி-ரோட்டு போட வேண்டியிருந்தது. வயல்-பறம்புகளில் எதேஷ்டமாய்ப் பருக்கைக் கற்கள் கிடக்க, வண்டிக்கு இரண்டு மூன்று ரூபாய் விலை கொடுத்துக் கப்பி வாங்குவதா?

உலாவச் செல்லும்போது கற்கள் பொறுக்கி வர வேணுமென்று உத்தரவிட்டார் மகாத்மா. ஆளுக்கு ஒரு கதர்ப் பை. பாபுவுடன் ஓடிக்கொண்டே கற்களைப் பொறுக்குவதில், "நான், நீ" என்ற போட்டியும் ஆரம்பித்தது.

ஆறடி உயரமுள்ள அந்த எல்லைப்புற காந்தி கான்ஸாஹிபு கூடக் குனிந்து குனிந்து கற்களைப் பொறுக்கினார் என்றால், அந்த அற்புதக் காட்சியை என்னென்று வர்ணிப்பது?

வீட்டுக்குத் திரும்பும்போதுதான் கதர்ப் பை கனத்து விட்டதா ? அல்லது கால்கள் தான் திடீர் என்று கனமாகி விட்டனவா ?—என்ற கேள்விகள் பிறக்கும் எங்களுக்குள்ளே.

இப்படிக் கற்கள் பொறுக்கி வந்ததில், இரண்டு வண்டிக் கற்கள் கப்பி-ரோட்டுக்கு இலவசமாகக் கிடைத்து விட்டன. ஆச்ரமத்துக் கஜானுவிலும் அஞ்சு ரூபாய் மிச்சம். எங்கள் சரீரத்திற்குக் கிடைத்த அப்பியாசத்தைச் சொல்லவும் வேண்டுமா ?

## பலனும் ஓய்வும்

நாங்கள் இருந்த அந்த ஒன்றரை மாதம்வரை எங்களுக்குச் சற்றும் வீட்டு ஞாபகமே எழவில்லை. ஜெயில் வாசத்திற்கும் ஆச்ரம வாசத்திற்கும் சில அம்சங்களில் பேதமில்லை : எனினும், ஆச்ரம வாசத்தில் ஏற்பட்ட அமைதி, சந்துஷ்டி, நிர்ப்பயமான சிந்தனை—இவை இனி வேறு எங்கே தேடினுல் தான் கிடைக்கப் போகின்றன ?

காந்தியின் மௌன தினத்தில் ஆச்ரமம் எங்கும் மௌனம்—ஒரு தனியான சாந்தம்—நிலவிவிடும். எங்களையும் அறியாமல் எங்கள் வாய் புதைந்துவிடும். தினசரி வேலைகள் யாவும் கிரமமாக நடந்து வந்தும், அன்று யாதொரு வேலையும் இல்லை யென்றே தோன்றும்! இத்தகைய மௌன நிலை உண்மையான ஓய்வல்லவா !

இந்த ஓய்வு, வீட்டிலே பல பணியாளர்கள் சூழ்ந்து உபசரிக்க, மின்சாரப் பங்காவின்கீழ்ச் சாய்வான நாற்காலியிலே சாய்ந்து சுக நித்திரை செய்து வந்தாலும் கிட்டுமா ? ஒரு மகானின் மௌன சக்தியாலன்றோ, நாங்கள் அத்தகைய அற்புத ஓய்வை உணரலானேம் ?

டி. ராஜன்,

Your letter & fruit
have come. Fruit this
time has been most
welcome because
it was needed badly
I can't get good
oranges or mosambis
in Bombay. And I
need them for patients
or semi-patients. You
may therefore send
me such mosambis
whenever you can.
Our understanding
is that they must

be reasonably cheap
I suppose I could
get almost any
fruit if I don't
count the cost. But
that must not be.
I did take the mosambis
but I dared not
take more than two
when there were
others in quarantine.
I must not say
more now.

17:7:37 Love
Segaon-Wardha Bapu

காந்தி அடிகள் நூலாசிரியருக்கு
எழுதிய கடிதம்.
இதன் மொழி பெயர்ப்பு
93 ஆம் பக்கம்

# 10. மகாத்மாவின் துணைவி

நானும் ஜானம்மாளும் வர்தா ஆச்ரமத்தில் தங்கி யிருந்த காலத்திலே கஸ்தூரிபாவும் அங்கே யிருந்தார். பேரன் பேத்திமார் என்றால் அவருக்கு உயிர் என்று ஏற்கெனவே சொல்லி யிருக்கிறேன். மொத்தத்தில், குழந்தைகளைக் கண்டாலே ரொம்பப் பிடிக்கும். ஆச்ரமத்துக் குழந்தைகளை யெல்லாம் தம் பேரன் பேத்திகள் போலவே கருதுவார். அவர்களுடைய உணவு விஷயங்களைக் கவனிப்பதும் அவருடைய முக்கிய அலுவல்.

ஆச்ரமத்திலிருந்து வந்த எங்கள் எல்லோருடைய கண்ணும் கருத்தும் சதா மகாத்மாவையே சூழ்ந்து நிற்கும். ஆகையால், கஸ்தூரிபா அந்தத் தள்ளாத வயதில் தம் அலுவல்களைத் தாமே கவனித்துக் கொள்வது, அவருக்குக் கஷ்டமாக இருக்குமே—என்பதையும் மறந்துவிடுவோம்.

அவர் யாரையும் தம்முடைய சொந்த வேலைக்காக ஏவமாட்டார். அது மட்டுமா? எங்களுக்கும் உதவி செய்ய வந்துவிடுவார்.

## கஸ்தூரிபாவும் மகாதேவும்

அந்த ஆச்ரமத்தில் மகாதேவ தேசாய் ஒருவரே உண்மையில் அன்னையின் சுக துக்கங்களை உணர்ந்தவர். கஸ்தூரிபாவும் வாய்க்கு ஒரு தரம் மகாதேவின் பெருமையைச் சொல்லாமலிருக்க மாட்டார். அந்த அன்னைக்கு அவர் புத்திர ஸ்தானத்தில் இருந்தார். அந்தோ! அந்த அரும் புதல்வரை இழந்த அன்னையின் மனம் என்ன பாடுபட்டதோ, அன்று அந்தச் சிறைக்குள்ளே?

## பதவியும் பொறுப்பும்

மகான்களின் வாழ்க்கைத் துணைவியாக வாய்க்கப் பெறுவது பெரும் பாக்கியம்தான். ஆனால் அப் பதவியின் பொறுப்பை வகிப்பதென்பது எளிதான காரியமா?

சாதாரணமான ஒரு புருஷனுக்கு மனைவியென்ற நிலையிலேயே எவ்வளவோ புத்திசாலித்தனமாக நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது; சொந்த அபிலாஷைகளைத் தூரக் கட்டி வைக்க வேண்டியிருக்கிறது; தணிந்து போக வேண்டியிருக்கிறது. காந்தி போன்ற மகான்களோ தமது லட்சியத்தை உலகத்திலே நிலைநாட்டப் பிறந்தவர்கள். அதற்காகத் தம்மையே அர்ப்பணம் செய்வதன்றி, தம் மனைவி மக்களுடைய உடல், பொருள், ஆவிகளையும்கூடத் தியாகம் செய்யச் சித்தமாயிருப்பவர்கள். பெரும் 'பிடிவாத' குணம் படைத்தவர்கள். உலகப் போக்கை எதிர்த்து, முன் வைத்த காலைப் பின்வாங்காது தீர நெஞ்சுடன் போராடி நிற்பவர்கள்.

மகான்களின் சித்தம் தம் விஷயத்திலும் தம் மனைவி மக்கள் விஷயத்திலும் வைரத்தைவிட வன்மை வாய்ந்தது; பிறர் விஷயத்தில் பூவைவிட மென்மையானது—என்று சொல்லலாம். அத்தகைய பெரியார் ஒருவரது இல்லறம் யாதொரு இடையூறுமின்றி நல்லறமாக நடைபெறுவதென்றால் லேசான காரியமா?

பதிபக்தி, பணிவு, அடக்கம், சகிப்புத் தன்மை, எல்லோரையும் தம் மக்கள் எனப் பாவிக்கும் தாயுள்ளம், தியாக புத்தி—இவை போன்ற அரும்பெருங் குணங்களை வாழ்க்கைத் துணைவி படைத்திருந்தால் தானே, அந்தக் காரியம் சித்தி பெறலாகும்?

இத்தகைய நற்குணங்கள் அன்னை கஸ்தூரிபாவிடம் மலிந்து காணப்பட்டன. இல்லாவிட்டால், 'மகாத்மா'

உண்மையில், ஒரு மகாத்மாவாக இருக்க முடியாது என்றே சொல்லலாம். மகாத்மா காந்தி ஒரு சிறந்த யோகியாகவோ, துறவியாகவோ மட்டும் இருந்திருக்க முடியுமே யன்றி, அடிமை-இந்தியாவுக்கு வழிகாட்டும் ஒரு தீர்க்க தரிசியாக—ஒரு லட்சிய புருஷனாக—இந்தியாவின் ராஜீய, சமுதாய, பொருளாதாரத் துறைகளில் இறங்கித் தீவிரமாய்ச் சேவை செய்யும் ஒப்பற்ற கர்ம வீரனாகப் பரிணமித்திருக்க முடியாது.

## ஆரம்பத்தில் கடும் பயிற்சி

மகாத்மாவின் இத்தகைய உயர்தர வாழ்க்கையில் இந்த வாழ்க்கைத் துணைவி எவ்வளவு தூரம் ஒத்துழைத்திருக்கிறார்! ஆனால் ஆரம்பத்தில் இந்த ஒத்துழைப்பு, கஸ்தூரிபாவுக்கும் கஷ்டமாய்த்தான் இருந்திருக்க வேண்டும்.

உதாரணமாக, "தோட்டி வேலை மிக இழிவானது; அதைச் செய்பவர் இழிந்த ஜாதியினராக இருப்பவர்!" என்ற தப்பான கொள்கையை மகாத்மா காந்தி மிகவும் வெறுத்து வந்தார். தாம் வசிக்கும் வீட்டையும் ஊரையும் சுத்தமாக வைத்துக் கொள்வது நம் எல்லோருடைய கடமையாகையால், உயர் குலத்தோரும் அப்பணியை மேற்கொள்ள வேணும் என்பது மகாத்மாவின் கொள்கை.

தென் ஆப்பிரிக்காவில் இவருடைய இல்லத்தில் இவருடன்கூட இருந்தவர்களில் ஒருவர் ஹரிஜன குலத்தில் பிறந்து கிறிஸ்தவ மதத்தைத் தழுவியவர். இவர் காந்தியடிகளின் குமாஸ்தா. அந்தப் பிரதேசத்து வீடுகளில் பம்பாய்க் கக்கூஸ் கிடையாது. இரவில் படுக்கை யறைகளில் மலஜலச் சட்டி வைப்பது வழக்கம். காந்தி யடிகளின் இல்லத்தில் வேலைக்காரர் ஏது? மகாத்மா அல்லது இவரது தர்ம பத்தினி கஸ்தூரிபா தான் அந்தச் சட்டிகளையும் சுத்தம் செய்வது வழக்கம்.

கஸ்தூரிபாவுக்குத் தம் கணவர், குழந்தைகள் இவர்களுடைய சட்டிகளைச் சுத்தம் செய்வதுபோல் அந்த ஹரிஜன குமாஸ்தாவின் சட்டியையும் மனமுவந்து சுத்தி செய்யக் கூடாமல் போயிற்றும். ஒரு சமயம் கண்கள் சிவந்து முத்து முத்தாய்க் கன்னங்களில் நீர் பெருகியோடச் சட்டியும் கையுமாக அவ்வேலையைச் செய்து கொண்டிருந்த கஸ்தூரிபாவை மகாத்மா கண்டு விட்டார்.

"இம்மாதிரி முரண்டுகளுக்கு என் வீட்டில் இடமில்லை. உனக்கு இவ்வேலைகள் பிடிக்காவிட்டால், இந்த வீட்டை விட்டு வெளியே போய்விடு" என்று கடுமையாகக் கூறினாராம். அதற்குக் கஸ்தூரிபா, "எனக்குத் தாய் தந்தையர் இல்லை. உங்கள் வீட்டை விட்டுத் துரத்தினால், நான் வேறு எங்கே போவது?" என்று அழுதுகொண்டே கேட்டாராம்.

அவருடைய அந்தப் பணிவான சொல், காந்தியின் மனசில் சுறுக்கென்று தைத்தது. தம் தவறுதலை இவர் உணர்ந்துகொண்டார். அதுமுதல் காந்தி கஸ்தூரிபாவை அம்மாதிரியான பணிகளைச் செய்யும்படி தூண்டுவதில்லை. ஆனாலும் கஸ்தூரிபா தாமே மனமுவந்து முன்வந்து அவ்வேலைகளைச் செய்வது சகஜமாகிவிட்டது.

## வேறொரு பயிற்சி

எக்காரணத்தினாலும் மாமிச உணவு, மதுபானம் இவை இரண்டும் செய்வது கூடாது என்பது மகாத்மாவின் மற்றொரு கொள்கை. வெகு சிரமப்பட்டு அதை விடாமல் இங்கிலாந்திலும் கைக்கொண்டு வந்தார். ஒரு சமயம் கஸ்தூரிபா பெரிதும் நோய்வாய்ப் பட்டிருந்தார். அப்போது, மாமிச ஆகாரம் கொடுத்தாலன்றி அவர் பிழைக்கமாட்டாரென்று வைத்தியர் கூறிவிட்டாராம். காந்தியடிகளுக்கு அது இஷ்டமில்லை.

கஸ்தூரிபாவுக்கு விஷயம் தெரிந்தது. அந்தத் துர்ப்பலமான நிலைமையிலும் அவர், "இந்த மனித சரீரம் கிடைப்பது அரிது. மாமிசம், மதுபானம் இவைகளை உட்கொண்டு இதை அசுத்தமாக்க நான் விரும்பவில்லை. இறந்தாலும் சரி; இருந்தாலும் சரி: இவ்விரண்டையும் நான் உட்கொள்ள மாட்டேன்!" என்று கூறி விட்டாராம். மகாத்மாவுக்கு எவ்வளவு உண்மையான ஸஹதர்மிணி அன்னை கஸ்தூரிபா!

## சத்தியாக்ரக வித்து

காந்திக்குச் சுய சிகிச்சையில் அபார நம்பிக்கை. சில சமயங்களில் பேர்போன டாக்டர்களின் வைத்தியத்தையும் தோல்வியுறச் செய்திருக்கிறார், தம் களிமண் சிகிச்சையினாலே. ஒரு சமயம் கஸ்தூரிபாவுக்கு இரத்தப்போக்கு அதிகம் உண்டாயிற்றாம். அதை நிறுத்த "உப்பு இல்லாத பத்தியம்தான் சரியான சிகித்ஸை" என்று காந்தி தீர்மானித்தார்.

அதைக் கஸ்தூரிபாவிடம் மெள்ளப் பிரஸ்தாபிக்க, "என்னால் அந்தப் பத்தியம் இருக்கமுடியாது!" என்று கண்டிப்பாய்க் கூறிவிட்டார் அம்மையார்.

ஆனால் இந்தக் கணவரா விடுபவர்? "ஏன் இருக்க முடியாது? இதோ பார். இன்றுமுதல் நான் உப்பை விட்டு விடுகிறேன்!" என்று சபதம் கூறினார். உடனே, "ஐயோ! எனக்காக நீங்களும் அப்படிச் செய்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளவேண்டாம். நான் உப்பு இல்லாமலே சாப்பிடுகிறேன்!" என்று ஒப்புக் கொண்டாராம் கஸ்தூரிபா.

இம்மாதிரி மகாத்மாவின் பேர்போன சத்தியாக்ரக இயக்கத்தின் ஆரம்பம், முதல் முதல் வீட்டிலேதான் நடந்தது; அந்த இயக்கத்திற்குக் கிடைத்த வெற்றியும்

கஸ்தூரிபாவின் பக்தியினால்தான்—என்று மகாத்மாவே கூறியுள்ளார்.

## கஸ்தூரிபாவின் சுதந்திர விருப்பம்

இவைகளைப் படிக்கும் நேயர்கள் அன்னை கஸ்தூரி பாவை 'வாயில்லாப் பூச்சி'-'பசு'-'எல்லாம் சகித்துப் போகும் சாதுசுபாவம் படைத்த ஒரு சாதாரண இந்து ஸ்திரீ'—என்றெல்லாம் எண்ணக் கூடும். ஆனால் அது முற்றிலும் தவறாகும்.

மகாத்மா தம் சுய சரிதையில் தம் மனைவியைப் பற்றி எழுதும்போது பின் வருமாறு கூறியுள்ளார்: "என் உத்தரவின்றி எங்கும் வெளியே செல்லக் கூடாது—என்று ஒரு ஹிந்து-கணவனுக்கு இருந்த சகஜமான சலுகையோடு நான் என் அதிகாரத்தை என் மனைவி மீது செலுத்த விரும்பினேன். ஆனால் அவள் நான் ஆட்டி வைக்கும் வெறும் மரப் பாவையாக இருக்க இசைய வில்லை. தனக்குரிய சுதந்திரத்தை இழக்க விரும்பின ளில்லை. என் உத்தரவின்றியே கோவில் குளங்களுக்குப் போய் வந்தாள். இதன் காரணமாக எங்களுக்குள் சிற்சில சமயம் மனஸ்தாபங்கள்கூட ஏற்பட்டதுண்டு. சுத்தமான நடத்தையும், குற்றமற்ற மனப்பான்மையு முடைய சிறுமி ஒருத்தி சுயேச்சையாக உலாவி வருவது தவறாகாது என்று பின்னால் உணர்ந்து கொண்ட நான், அவளைக் கட்டுப்படுத்த முயன்றதற்காக வருந்தினேன்."

## தாயன்பு

பதிபக்தியைப்போல், அன்னை கஸ்தூரிபாவின் தாயன்பும் விசேஷமாய்க் குறிப்பிடத் தக்கது. அவரது மூத்த புதல்வர் ஹீராலால் மகமதிய மதத்தைத் தழுவின போது, அன்னை கஸ்தூரிபா விடுத்த அறிக்கை ஹீராலாலின் ஹிருதயத்தை அப்படியே உருக்கிவிட்டது.

அந்த அறிக்கையின் பயனாக அவர் ஹிந்து சமயத்திற்குத் திரும்பியது நாடறிந்த செய்தி. அத்தகைய அற்புதம் நிகழ்த்திய தாயன்பு அந்நாளில் பொதுமக்களின் உள்ளத்தையும் பெரிதும் கவர்ந்தது.

## வழிகாட்டியாகிறார்

அன்னை கஸ்தூரிபா படித்தவரில்லை என்று ஏற்கெனவே சொல்லிவிட்டேன். ஆனாலும் அவர் தமக்கு இருக்கும் அனுபவ ஞானத்தைக்கொண்டு பெரிய மேதாவிகள் முன்னிலையிலும் சமயோசிதமாக நடந்துகொள்ளும் சாமர்த்தியம் வாய்ந்தவர்.

தூய கதராடை உடுத்திச் சற்றும் சோம்பலில்லாமல் அவர் ராட்டுக்குமுன் வீற்றிருந்து நூல் நூற்கும் காட்சி, இந்தியப் பெண்மணிகளில் ஒவ்வொருவரும் காணத் தகுந்தது.

பதிபக்திக்கும் தாயன்புக்கும் சோம்பலின்மைக்கும், வீட்டுக் காரியங்களைச் செய்யும் திறமைக்கும், அடக்கமான சரள சுபாவத்திற்கும் ஸ்ரீமதி கஸ்தூரிபா தற்கால இந்திய ஸ்திரீகளுக்கெல்லாம் ஒரு சிறந்த வழிகாட்டியாகிறார்.

## அன்னையின் மூன்று குறைகள்

ஒரு சாதாரண ஸ்திரீயாக இருந்தால், சுகபோகம் இல்லை!—என்று முணுமுணுக்கலாம். வைரக் கம்மல் இல்லையே; பட்டுப் புடவை இல்லையே; பெரிய மனை இல்லையே; கைகால் பிடிக்கத் தாதிமார்கள் இல்லையே!—என்றெல்லாம் குறைப்படலாம். வயிற்றில் பிறந்த பிள்ளை ஒருவனாவது ஐ. ஸி. எஸ். உத்தியோகம், உயர்ந்த பட்டம் பதவி, பெற்றிருக்கிறானா? அதுவும் இல்லையே!—என்றாவது குறைப்படத் தோன்றும்.

அன்னை கஸ்தூரிபா தனக்காகக் குறைப்படவில்லை; தன் வயிற்றில் பிறந்த மக்களுக்காகக் கவலைப்படவில்லை; தன்னுடைய தேச மக்களுக்காகவே பாடு பட்டார்.

நாற்பது கோடி மக்களில் அரை வயிறு-அன்னம் கிடைக்கப் பெறுகிறவர்கள் எத்தனை பேர்? கூரைக் குடிசைகளிலாவது பசிப் பிணி யில்லாமல் வசிப்பவர் எத்தனை பேர்? குடிக்கக் கூழும், உடுக்க உடையும் இன்றிப் பரிதவிக்கும் இந்தியத் தாயின் எண்ணற்ற மக்களை எண்ணி எண்ணிப் பரிதவித்தார்; ஏங்கி ஏங்கிப் பணி செய்தார் கஸ்தூரிபா.

மற்றொரு குறை மனசிலே. நெடு நாளாகத் தீராத குறை. அது என்ன? வன விலங்குகளும் சுயேச்சை யாகத் திரிகின்றனவே! ஆனால் இந்திய நாட்டின் ஏழை மக்கள் மட்டும் சுதந்திரம் அற்றுக் கிடக்கிறார்களே! வறுமைப் பிணிக்கும் சுதந்திர மின்மை ஒரு முக்கிய காரணமல்லவா? இந்தத் துயரமும் கஸ்தூரிபாவின் உள்ளத்தை வாட்டிக்கொண்டிருந்தது.

தம் கணவருக்காகவே,—அவருடைய சிறை வாழ்வை உன்னியே,—அந்தப் பதிவிரதா சிரோமணி கடைசிவரை வருத்தப்பட்டார் என்று நினைக்கிறவர்களும் இருக்கலாம். ஆனால் கடைசிவரை அவர் மனத்தை வாட்டிய மாபெருங் குறை நாட்டைக் குறித்ததே என்று நிச்சயமாக நான் சொல்லுவேன்.

மூன்றாவதாக ஒரு அலாதிக் குறை. அது என்ன? நம் அன்னையை அந்தக் காலத்திலே பள்ளிக்கு அனுப்பிப் படிக்க வைக்க வில்லையாம் அவருடைய பெற்றோர். ஆகவே, அவர் கல்வி கற்கவில்லையாம்.

ஆனால் இது ஒரு பெருங்குறையாகவா காணப்பட்டது நம் அன்னையிடம்? பரம்பரைப் பண்பாடும் கேள்வி-

ஞானமும் நிறைந்த அந்த ஸ்திரீ ரத்தினத்திற்கு,—ஸீதை ஸாவித்ரிக்கு ஒப்பான ஸதீமணிக்கு,—இது ஒரு குறை யாகுமா?—என்று கேட்கலாம் வாசகர்கள்.

அவருடைய மஹாத்மாவின் குற்றச் சாட்டு இது. "என் கஸ்தூரிபா படித்தவர் இல்லை!" என்று முதல் முதல் குறைப்பட்டவர் அவர்தான். பின்னல் அன்னை மனத்திலும் அது உறுத்தலாயிற்று.

அதற்குக் காரணம், தன் பெயரைத் தொடர்ந்து 'பி. ஏ., எம். ஏ. என்ற எழுத்துகள் ஜொலிக்க வில்லையே என்பதா? தன்னை யாவரும் நல்ல படிப்பாளி, கலா பண்டிதை என்று மெச்சவில்லையே என்ற குறைபாடா? மேடைப் பிரசங்கங்கள் சர மாரியாகப் பொழிய முடியவில்லையே!—என்ற கவலையா? அவையெல்லாம் இல்லை. மஹாத்மாவின் மனைவி, ஸஹதர்மிணி, படித்தவர் இல்லை என்று உலகம் சொல்லவா? தேச மக்களின் பூர்ண சேவைக்குக் கல்வி யறிவும் கலை யறிவும் ஓரளவா வது அவசியம்தானே?'

"இவை இரண்டையும் நான் போதுமான அளவு பெற்றிருந்தால், இந்திய மக்களுக்கு என் உழைப்பு இன்னும் பன்மடங்கு பயன் பட்டிருக்கும் அல்லவா?" என்று அடிக்கடி எண்ணினர் நம் அன்னை கஸ்தூரிபா.

வாசகர்களே! அன்னையின் வாழ்க்கையிலுள்ள மூன்று குறைபாடுகளை விளக்கிவிட்டேன். இனி உங்கள் கடமையை இன்னதென்று சொல்லவும் வேண்டுமா?

ஒரு ராஜாவின் தாயார் ஒரு சமயம் மாம்பழத்திற்கு ஆசைப்பட்டாராம். மாம்பழம் கிடைக்குமுன்னே அவர் இறந்து விட்டார். தங்க மாம்பழங்களைச் செய்வித்துத் தானம் செய்தாராம் ராஜா, தம் அன்னையின் ஆத்மா சாந்தி அடையட்டும் என்று.

இந்தக் கதையின் பிற்பகுதி—மூட நம்பிக்கைகளைக் கண்டிக்கும் அந்தப் பகுதி — நமக்கு இங்கே தேவை யில்லை. அன்னை கஸ்தூரிபாவின் குறைகளை அந்த ராஜாவைப்போல் தீர்த்து வைக்க வேண்டுமென்ருல், அன்னையின் அந்த மனக் குறைகளுக்கு இனி இந்த நாட்டில் இடமில்லாமலே செய்து விடவேண்டும். அப்போதுதான் அன்னையின் ஆத்மாவுக்குச் சாந்தி ஏற்படும்.

அவர் ஆத்மா சாந்தி அடையவில்லை என்ருல், வேறு எவருக்குச் சாந்தி கிடைக்கும்?—என்று கேட்கலாம். இப்பூவுலகில் தம் கடமை முழுதும் செய்து கரை கண்டவர் அந்த அம்மையார் அல்லவா? உண்மைதான். ஆனுல் அவருடைய ஆத்மா இந்தியாவின் ஆத்மாவோடு கலந்துவிட்டது. இந்தியாவின் ஆத்மா தன் குறைகள் நிறை செய்யப் பெற்றுச் சாந்தி அடைந்தால்தானே, அன்னை கஸ்தூரிபாவின் ஆத்மாவுக்கும் சாந்தி?

இமாலயம் முதல் கன்யாகுமரிவரை அவருடைய தூய வாழ்க்கை நாலு கோடி மக்களின் ஹிருதய சிம்மாஸனத்தைக் கோயிலாகக் கொண்டு விட்டது. அவர் புகழுடம்பு நமக்கிடையே உலாவத் தொடங்கி விட்டது. அந்தக் கனிந்த உள்ளம், நம் பார்வையிலேயே தெளிவுறத் தென்படுகிறது. கங்கையும் காவேரியும் ஓடும்வரை, அவருடைய பெயர் நிலைத்திருக்கும் என்று தோன்றுகிறது, தேச பக்தர்களுக்கு. அது போலவே அவர் குறைபாடுகளும் நிலைத்திருக்க வேண்டுமா?

அவை நம்முடைய குறைபாடுகளாகி விட்டன இப்போது. இவற்றை ஒழிப்பது பாரத அன்னையின் மக்களாகிய நம்முடைய கடமையாகும்.

பாரத நாட்டுப் பெண்கள் அனைவரும் போதுமான அளவிற்குக் கல்வியறிவு பெற்றுவிட்டனர் என்று நம்

வருங்காலச் சரித்திரம் கூறுமானால், "நான் படிக்க வில்லையே!" என்றிருந்த அந்த அன்னையின் ஏக்கத்தை நீக்கிவிட்டதாக நாம் பெருமை அடையக்கூடும்.

தம் மக்கள் பெறும் பேற்றைத் தாம் பெற்ற பேறு என்று எண்ணி மகிழாத தாயுள்ளம் உண்டோ? தேச சரித்திரத்தில் பொன்னெழுத்தால் பொறிக்கக்கூடிய இந்த நம் கல்விப் பணி பாரத அன்னைக்கு எவ்வளவோ ஆறுதல் அளிப்பதோடு, அந்த அன்னையோடு கலந்து விட்ட அன்னை கஸ்தூரிபாவுக்கும் ஆறுதல் அளிக்கும் என்று நம்புவது மூட நம்பிக்கை ஆகுமா?



# 11. காந்தி பக்தர்களைச் சந்தித்தது

## ராஜகுமாரி அமிர்த கௌர்

நான் வர்தாவில் இருந்தபோதுதான் ராஜகுமாரி அமிர்த கௌர் மகாத்மாவைச் சந்திக்க ஆச்ரமத்திற்கு வந்தார் முதல் தடவையாக.

அவர் தமது அந்தஸ்துக்கு ஏற்ற உயர்ந்த பட்டாடைகள், தாதி, பரிசாரகன் முதலிய வைபவங்கள் சூழ வந்தார். அவருடைய மாமா கைலாகு கொடுக்க, துவண்டு விழும் அல்லிக் கொடியென மெல்ல நடந்து, மேல் மாடியில் நாங்கள் இருந்த ஹாலுக்குள் வந்து சேர்ந்தார்.

காந்தியடிகளும் வெகு மரியாதையுடன் வரவேற்றுப் பேசினர். இரண்டு மூன்று நாள் வர்தாவில் தனி ஜாகையில் இருந்துகொண்டு, பிரார்த்தனைகளுக்கு வந்து போய்க்கொண்டிருந்தார்.

சேவாக் கிராம ஆச்ரமத்தில் அவரை நான் மறுபடி பார்த்தபோதோ,— ஆஹா, என்ன மாறுதல்! அந்த வாழ்க்கையில் ஒரு புரட்சியே வந்துவிட்டது. சாதாரண முரட்டுக் கதர்ப் புடவை உடுத்திக்கொண்டு, தாமும் ஆச்ரம வாசிகளில் ஒருவராகி விட்டார். ஆச்ரமத்துச் சாப்பாட்டைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். வெட்ட வெளியில் மைதானத்திலே மற்ற ஆச்ரம வாசிகள் போல் தரையிலே படுக்கை விரித்துப் படுத்துக்கொண்டும், மற்ற ஆச்ரம நியமங்களுக்கு உட்பட்டும், தூய வாழ்க்கை வாழ்ந்து வந்தார். மகாதேவ தேசாயின் அலுவல்களையும்

தாம் மேற்கொண்டு சதா மகாத்மாவின் பக்கத்திலிருந்து கடிதப்போக்கு வரத்துகளையும் கவனித்து வந்தார்.

முன் பார்த்த அமிர்த கௌருக்கும் இப்போதுள்ள அமிர்த கௌருக்கும் எவ்வளவு வித்தியாசம்! புனர் ஜன்மம் எடுக்காமலே, புதிய பிறவி பெற்றுப் புது வாழ்வு வாழும்படி செய்ய வல்ல சித்தரல்லவா மகாத்மா?

## ஜமன்லால் பஜாஜ்

ஜவஹர்லால் நேரு, காந்தியடிகளுக்குப் பின்னுல் இவர் வகிக்கும் அரசியல் - பீடத்துக்கு உரியவர் — என்பது பலரும் அறிந்த விஷயம். மகாத்மாவும் அடிக்கடி சொல்லியிருக்கிருர். நேருவைக் காந்தியடிகளின் அபிமான புத்திரர் என்ருல், காலஞ் சென்ற ஜமன்லால் பஜாஜை மகாத்மாவின் சுவீகார புத்திரர் என்றே சொல்லத் தகும்.

ஆனுல் இதில் ஒரு விஞேதம். தகப்பன் தான் பிள்ளையைச் சுவீகாரம் எடுத்துக் கொள்வதை நாம் சர்வ சாதாரணமாய்ப் பார்த்திருக்கிருேம். பஜாஜ் விஷயத்திலோ, பிள்ளையே முன் வந்து தகப்பனைச் சுவீகரித்துக் கொண்ட கதை தான்.

கம்ப ராமாயணத்திலே, தசரத சக்ரவர்த்தி யாகத்தால் நாலு பிள்ளைகளையும், தியாகத்தால் மூன்று பிள்ளைகளையும் ஆக மொத்தம் ஏழு பிள்ளைகளையும் பெற்றதாகக் குறித்திருக்கிறது. குகன், சுக்கிரீவன், விபீஷணன் ஆகிய மூவரும் தசரதர் ராமனைக் காட்டுக்கு அனுப்பிய தியாகத்தால் பெற்ற பிள்ளைகளாம். இம் மூன்று பிள்ளைகளிலும் குகன், சுக்கிரீவன் என்ற இருவரையும் ராமனே நேரில் போய்த் தந்தை பெயரால் சுவீகரித்துக் கொண்டான். கடைசிப் பிள்ளையான விபீஷணனே, தானே ராமனுக்கு முன் வந்து, அவனை அண்ணனுகவும் தசரதனைத்

தகப்பனாகவும் சுவீகரித்துக் கொண்டான் — என்பது கம்பன் சொல்லும் கதை.

கம்பனைப் படித்ததில்லை ஸ்ரீமான் பஜாஜ். எனினும் விபீஷணனின் ஸாத்விக உணர்ச்சியோடு ஸ்ரீ பஜாஜ் ஒரு சமயம் மகாத்மா காந்தியின் முன்னிலையில் போய் நின்றுகொண்டு, "என்னைத் தங்களுடைய புத்திரனாகக் கொள்ளவேணும்" என்று வேண்டிக் கொண்டாராம். மகாத்மாவும் அதற்கு உடன்படவே, இவரை அப்படியே தமது சுவீகாரத் தந்தை ஆக்கிக்கொண்டு விட்டார் பஜாஜ். அது முதல் மகாத்மாவின் யோக க்ஷேமம் இந்தப் 'பிள்ளையாண்டானு'டைய பொறுப்பாகிவிட்டது.

ஸ்ரீ பஜாஜின் அழைப்புக்கு இணங்கியே மகாத்மா சபர்மதியை விட்டபிறகு வர்தாவுக்கு வந்து சேர்ந்தார். அது முதல் மகன்வாடியில் பஜாஜின் பங்களாக்களும் தோட்டங்களும், மகிளாச்ரமக் கட்டடங்களும், மகாத்மாவுக்கும் இவருடைய பரிவாரங்களுக்கும் சொந்த மாகிவிட்டன. ஏன்? பஜாஜ் தம்பதிகளும் அவர்களுடைய குடும்பமுமே இவருடைய சொத்தாகி விட்டார்கள்!

"அடியார்க்கும் அடியேன்" என்று பெரியோர் சொல்லுவதுண்டல்லவா? ஸ்ரீ பஜாஜும் மகாத்மாவுக்கு வேண்டியவர்களுக்கெல்லாம் வேண்டியவராகி விட்டார். அந்தப் பிரபுவின் வரம்பில்லாத வள்ளன்மையினால் அநேக காந்தி ஸ்தாபனங்கள் நடைபெற்று வந்தன. அந்த வள்ளன்மையினால்தான் அந்த ஸ்தாபனங்கள் காந்தி சிஷ்யர்கள் பலருக்கும் அடைக்கலமாகவும் இருந்தன. தென் இந்தியா வரை அந்த வண்மை பரவி விட்டது.

ஸ்ரீ பஜாஜ், அடிக்கடி என்னை நோக்கி அன்புடன் சொல்லியிருக்கிறார்: "நீ மகாத்மாவைத் தரிசிக்க விரும்பும் போதெல்லாம் இங்கே வந்துவிடு. முன்னாடி ஒரு தந்தி

மட்டும் எனக்கு அனுப்பிவிட்டால் போதும். உனக்கு வேண்டிய சௌகரியங்களை யெல்லாம் நான் செய்து கொடுக்கிறேன். வேணுமானால் நீ என் பங்களாவிலேயே தங்கியிருக்கலாம். என்னுடைய பெண்கள்ளான உமாவும் மதாலஸாவும் உன்னுடைய வசதிகளைக் கவனிப்பார்கள்.”

இத்தகைய வண்மைதான் புத்திர பாவத்துடன் ஒரு கிராமத்தையே அர்ப்பணம் செய்துவிட்டது மகாத்மாவுக்கு,— இவர் வர்தாவை விட்டுக் கிராமம் செல்ல விரும்பியதும்.



# 12. சேவாக் கிராம நினைவுகள்

இம்முறை மகாத்மா காந்தியின் தரிசனம் சேவாக் கிராமத்தில் கிடைத்தது. *ஸ்ரீமதி குமுதினியுடன் அவரை நான் பார்க்கப் போயிருந்தேன்.

## பழைய நினைவுகள்

மகாத்மா ஒரு சிறு குடிசையில் வசித்துவந்தார். மண் சுவர் எழுப்பிக் கூரை வேய்ந்த குடிசை. மெழுகிய மண் தரை. ராமன் சீதையுடன் பஞ்சவடியில் இது போன்ற பர்ணசாலையில்தான் வாசம் செய்து வந்தான்—என்று ஞாபகப் படுத்திக்கொண்டேன்.

மண் சுவரானாலும் ஒரு வித வெள்ளை நிற மண்ணாக இருந்ததால், பளிங்குச் சுவர்போல் வெண்மையாக மழமழப்பாய்ப் பிரகாசித்தது. அக்குடிசையின் உட்புறச் சுவரை அலங்கரித்தது, ஸ்ரீமதி மீராபென் எழுதிய சித்திர வேலைப்பாடு.

சுற்றிலும் சில கல்லுக் கட்டடங்களும் இருந்தன. ஆனால், அவை அதிதிகளின் உபயோகத்திற்காகவேயன்றி, மகாத்மாவின் உபயோகத்திற்கு அன்று.

மகாத்மாவுக்கு அப்பொழுது சற்றும் அவகாசம் இல்லை. அலுவல்கள் அதிகமாக இருந்தன. இஷ்டப் பட்டவர்கள் தனிப்பட்ட நிலையில் சத்தியாக்கிரகம்

* தமிழ் நாட்டிலே பிரசித்தமான பெண்-எழுத்தாளர். 'கொனஷ்டை' என்ற பெயரிலே ஒளிந்துகொண்டு தமிழர்களுக்கு உயர்தர ஹாஸ்ய விருந்துகள் அளித்து வரும் பிரபல எழுத்தாளரின் புதல்வி.

தொடங்கப் போகும் சமயம். நாங்கள் அங்கே இரண்டு நாள் தங்கினோம்.

ஸ்ரீ அரிய நாயகம் நடத்திய பேஸிக் ஸ்கூல் என்ற கல்விச் சாலையைப் பார்வையிட்டோம். அதுவும் கூரைக் குடிசைதான். அதிலே அந்தக் கிராமத்துக் குழந்தைகள் படித்துக் கொண்டிருந்தார்கள்.

மூன்று நாலு ஐந்து முதல், எட்டு, ஒன்பது, பத்து வயதுக் குழந்தைகள்வரை அந்தப் பள்ளிக்கூடத்தில் படித்துவந்தார்கள். அந்தக் குழந்தைகள் எல்லாம் விளையாட்டுப்போல் தக்ளி, சர்க்கா வைத்துக்கொண்டு நூல் நூற்பது, கணக்குப் போடுவது முதலான வேலைகளைக் குதூகலமாகச் செய்து வருவதைக் கண்டோம். தாங்கள் நூற்ற நூற் சட்டைகளையே அவர்கள் எவ்வளவு பெருமையாக அணிந்து கொண்டிருந்தார்கள்!

மகாத்மா சேவாக் கிராமத்திற்கு வந்து சேர்ந்ததை எனக்கு ஒரு கதையாகச் சொன்னார் அங்கே ஒருவர்.

வர்தாவில் மகாத்மா இருந்தது, அவரைத் தரிசிக்க வந்தவர்களுக்கு மிகவும் சௌகரியமாகத்தான் இருந்தது. ஆகையால் நாளுக்கு நாள் பேட்டி காண வருவோரின் தொகை அதிகரித்துக் கொண்டே போயிற்று. ஜமன்லாலின் வரையறுத கொடைக்கும்—விருந்தோம்பலுக்கும் கூட—ஒரு வரம்பு வேண்டாமா?

"நான் இங்கே இப்படி நகர வாழ்வு வாழ்ந்து வந்தால், பிறர், தேசத் தொண்டின் நிமித்தம் கிராமம் செல்வதுதான் எப்படி நடைபெறும்? தூரத்தில் ஒரு கிராமத்திலே போய் வசிப்பதுதான் சரி. கிராமப் புனருத்தாரண வேலையில் பிறரைத் தூண்டுவதற்கு அதுதான் சரியான முறை. இந்தப் பேட்டித் தொந்தரவும் குறையும்; ஜமன்லாலுக்கும் சற்றுச் சிரமம் குறையும்"

என்ற எண்ணம் மகாத்மாவின் மனத்திலே ஊறிக் கொண்டிருந்ததாம். மகாதேவுடனும் ஜமன்லாலுடனும் இதைப் பற்றிப் பிரஸ்தாபித்தாராம்.

அவர்கள் தங்கள் உயிருக்கும் உயிரான பாபுவை வனவாசம் செய்ய விடுவார்களா? வர்தாவிலே தான் மகாத்மா இருக்கவேணு மென்று அவர்கள் முடிவு கூறி விட்டார்கள்.

## ஒரு நாள் இரவிலே

ஒரு நாள் இராத்திரி சுமார் 7 மணி இருக்கும். பிரார்த்தனை முடிந்தது. கையிலே தடி ஒன்று எடுத்துக் கொண்டார் காந்தி; கதர்ச் சால்வையும் எடுத்துக்கொண்டார். பேசாமல் ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் தன்னந்தனியே 'விர்' என்று கிளம்பி விட்டார் ஒரு கிராமத்தை நோக்கி.

பஜாஜுக்கும் மகாதேவுக்கும் செய்தி எட்டியது. ஆனால் அவர்களுக்கு அவரைப் பின் தொடரத் துணிவு இல்லை. மகாத்மா கோபித்துக் கொண்டிருக்கிறார் என்று நினைத்தார்கள். கொஞ்ச தூரம் போய்த் திரும்பி வந்து விடுவார் என்று நம்பினார்கள். எதிர்பார்த்தார்கள். இராத்திரி யெல்லாம் சிவராத்திரியாக விழித் திருந்தார்கள். மகாத்மா திரும்பி வரவில்லை. இதற்குள் 'சோ' வென்று மழை கொட்டத் தொடங்கிவிட்டது.

கிராமத்துப் பாதையெல்லாம் ஒரே சேறாகிவிட்டது. அந்த இருட்டிலும் மழையிலும் வழியிலுள்ள கஷ்டங்களையெல்லாம் பாராட்டாமல் அந்தத் தள்ளாத வயதில் அஞ்சு மைல் தூரம் நடந்து சென்றார் மகாத்மா.

நள்ளிரவில் ஒரு கிராமத்திலே ஒரு குடியானவன் குடிசைக்குப் போய்ச் சேர்ந்தார். அவன் கொடுத்த

தண்ணீரைப் பருகிவிட்டு அவனுடைய நார்க் கட்டிலில் படுத்துக்கொண்டார். அந்தக் கிராமத்திற்குச் சிவ கிராமம் என்று பெயர்.

## சிவ கிராமம் சேவாக் கிராமமானது

காலையில் அவரைத் தேடிக்கொண்டு வர்தாவே திரண்டு வந்து விட்டது, அந்தக் கிராமத்திற்கு எனலாம். "ராமன் இருப்பதே அயோத்தி" என்பது மறுபடியும் உண்மையாயிற்று.

அன்று நாங்கள் பார்த்த சிவ கிராமம் அந்தப் பழைய சிவ கிராமமா? குட்டிச் சுவர் நிறைந்த அந்தப் பட்டிக்காடா?

தந்தி தபாலாபீசுகள் என்ன, கப்பி-ரோடென்ன, டெலிபோன் வசதி என்ன! கிராமத்துக் குழந்தைகளுக்குப் பாடசாலை, தொழிற்சாலை, கோசாலை—என்று எத்தனை வித வசதிகள்! இந்தக் கிராமம், மற்றக் கிராமங்களுக்கு ஒரு முன்மாதிரி யாகிவிட்டது.

சிவ கிராமம் சேவாக் கிராமமான கதையைக் கேட்டதும், நம் நாட்டிலுள்ள கிராமங்க ளெல்லாம் இத்தகைய மாறுதல் அடைந்தால் எவ்வளவு நன்றாக இருக்கு மென்று எனக்குத் தோன்றிற்று. ஆனால் நமக்கு இருக்கும் காந்தி ஒருவர் தானே? தீபத்தில் கொளுத்திய தீபம் போலப் பல்லாயிரம் காந்திகளைத் தோற்றுவிக்கும் மந்திர வித்தைதான் தெரியவில்லையே!

# 13. வயது 74—பட்டினி 21 நாள்

சமீபத்தில் இவருடைய உண்ணு விரதத்தின்போது இவரை மீண்டும் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது.

## சென்னையைக் குலுக்கிய செய்தி

பிப்ரவரி-மீ 11-ம் தேதி வியாழக் கிழமை காலை வழக்கம்போல் காப்பியைக் குடித்துக் கொண்டே 'என்ன புதிய யுத்தச் செய்தி?' என்று பத்திரிகையைப் பிரித்தேன். சிங்கப்பூர் வீழ்ச்சிக்கும் மேலான 'திடுக்கிடும்' செய்தி ஒன்று கிடைத்தது.

காந்தித் தாத்தா உண்ணு விரதமிருக்க ஆரம்பித்து விட்டார். வயது 74: பட்டினி 21 நாள்!

அன்று பிட்டுக்கு மண் சுமந்த சுந்தரேசர் முதுகில் விழுந்த அடி, மதுரை வாசிகள் அனைவரையும் குலுக்கி விட்டதாம். அதுபோலச் சென்னை வாசிகளையும் ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது இந்த உபவாசச் செய்தி.

## உள்ளக் கலக்கம்

"காந்தியின் உடல் நிலை மிகவும் மோசமாகி விட்டது" என்ற செய்தி சனிக்கிழமை மாலைப் பேப்பரில் வந்தது தான தாமதம்: காட்டுத் தீப்போல் எங்கும் பரவிச் சென்னை மக்களின் உள்ளத்தையும் தீக்க ஆரம்பித்தது. ஓடினோம் ஆலயங்களுக்கு. முற்றுகை போட்டோம் பேப்பர்-ஆபீஸ்களை. ரேடியோக்கள் திருப்பிய வண்ண மிருந்தன. பட்டணத்துப் பிரமுகர்கள் வீடுகளைப் பல

முறை வலம் வந்தோம். பயன்: கணக்கில்லாத தந்திகளும் லண்டனுக்குக் கேபிள்களும். என்ன செய்தும் என்ன? மனம் நிம்மதி அடையவில்லை.

காலராத்திரிதான் அன்று இரவு. பல முறை படுக்கையில் எழுந்து உட்கார்ந்து பிரார்த்தனை செய்து கொண்டோம். உரக்க யாரேனும் பேசினாலும் திடுக்கிட்டு விழித்து, 'என்ன? என்ன?' என்று வினவினோம்.

ஒவ்வொருவர் வீட்டிலும் ஏதோ துக்க சம்பவம் நிகழ்ந்து விட்டது போன்ற உணர்ச்சி. எதைக் கண்டாலும் வெறுப்பு. ஒரே கவலை—ஒரே ஏக்கம்.

சீதையைத் தேடி ராமன் லங்கைக்குப் போனான். ஒரு மகா சமுத்திரம் குறுக்கிட்டது. உடன் வந்த வானர சேனை லங்கைக்குள் புகவேணு மென்று துடித்துக் கொண்டிருந்தது. ராமனோ வினயத்துடன் வழி விடும்படி பிரார்த்தித்துக் கொண்டான் சமுத்திர ராஜாவை. அந்த அலைகளின் கோஷங்களுக் கிடையே பிரார்த்தனை காதில் விழவே யில்லை. தர்ப்பையிலே படுத்துப் பிராயோப வேசம் செய்யத் துணிந்தான் புருஷோத்தமன்.......

பலாத்காரமின்றிப் பிறரை இணங்கும்படி செய்வதற்குப் பட்டினி கிடப்பது ஒரு புராதன வழக்கம் நம் தேசத்திலே. நமது கோரிக்கை நிறைவேற, நமது பேரவாவை வெளியிட, இது ஒரு முக்கிய சாதனம். பிறர் மனசை இளகச் செய்வதற்கும் ஒரு வழி. ஆத்ம பலத்தைத் சோதிக்கும் புனித விரதமும் இது. பழைய பாவம் பழி தீர்ந்து, புது வாழ்வு வாழ்வதற்கும் ஏற்ற சாதனம். பிறர் பாவம் குறைகள் திரவும், தக்க பிராயச் சித்தம்.

இத்தகைய உண்ணா விரதத்தை மகாத்மா மேற் கொண்டதும், எங்கள் மனம் பூனாவும் மதராஸுமாக

ஊஞ்சலாடிற்று. பூனுவுக்குப் போவதாக முடிவு செய்தேன், ஸ்ரீ ராதாபாய் சுப்பராயன், ஜானம்மாளோடு.

## புறப்பட்டோம்

சனிக் கிழமை காலை எக்ஸ்பிரஸில் புறப்பட்டோம். வண்டித்தொடர் வழக்கம் போல்தான் போய்க்கொண்டிருந்தது. ஆனால் எறும்புபோல் ஊர்ந்து சென்றதாகவே எங்கள் உணர்ச்சி. ஸ்டேஷன்களில் யாராவது தெரிந்த ஒருவரைச் சந்தித்தால் மகாத்மாவின் தேக நிலைமையைப் பற்றிக் கேட்கவேணு மென்ற ஆவல். எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டே போனோம். ரயில்களில் ரேடியோ ஏன் இருக்கக்கூடாது?

ஞாயிற்றுக் கிழமை காலை 8-30 மணிக்குப் பூனு ஸ்டேஷன் வர, "அப்பாடி!" என்று ஒரு பெருமூச்சு விட்டோம். மகாத்மாவின் அருமைப் புதல்வர், தென்னுட்டுக்கே மாப்பிள்ளை யெனப் பாராட்டுகிறோமே, தேவதாஸ் காந்தி—அவர் எங்களை அன்புடன் வரவேற்று, மகாத்மாவின் உடல் நிலையைப் பற்றிய கவலையைத் தீர்த்து வைத்தார்.

## அரண்மனை வாசலில்?

ராமேச்வரம் சென்றாலும் சனீச்வரன் விடுகிறதா? அன்று மாலைவரை அனுமதிக்காக நாங்கள் காத்துக் கொண்டிருந்தோம்.

சரியாய் 4-30 மணிக்கு ஒரு டாக்ஸியில் அந்த அரண்மனைக்குப் புறப்பட்டோம். திகைக்க வேண்டாம்: ஆகாகான் அரண்மனைக்குத்தான். வாசலில் ஏற்கெனவே பத்துப் பதினைந்து கார்கள் நின்று கொண்டிருந்தன. சுமார் 60, 70 பேர்—குழந்தைகள் ஸ்திரீகள் உட்பட—அங்கே வெயிலில் காத்துக் கொண்டிருந்தார்கள்.

5-30 மணிக்கு உள்ளே செல்ல அனுமதி கிடைத்தது. முதல் கேட்டைத் தாண்டி உட்செல்ல, முள்ளுக் கம்பிகள் போட்ட மற்றொரு கேட் தென்பட்டது. அங்கும் ஆயுத பாணிகளான சிப்பாய்கள் காவல் புரிந்து கொண்டிருந் தார்கள்.

## தரிசனம்

விசாலமான தோட்டத்தின் நடுவில் இருந்த அந்த ஜெயில்-அரண்மனையின் ஒரு மூலையிலே, ஒரு அறையில், கட்டிலில் உடல் முழுதும் தூய வெள்ளைக் கதர் போர்த்துப் படுத்துக் கொண்டிருந்தார் மகாத்மா. 19-வது நாள் உபவாசம். கால்மாட்டில் போய் நின்றோம். தலையில் 'மண்பட்டி' கட்டி யிருந்தது. முகம் மட்டும் தேஜோமயமாய்த் துலங்கிற்று, ஒளி வீசிய கண்களுடன்.

எங்கள் கண்ணுக்குப் படுக்கையில் உடல் இருந்த தாகவே தென்படவில்லை. எங்களைக் கண்டதும் புன் முறுவல் பூத்தார். அந்தத் திருமுகம், அந்த இளநகை, அந்தக் கூர்மையான பார்வை, என்றும்போல் வசீகர மாகவே யிருந்தன.

என்ன என்னவோ, பேசவேணுமென்று நினைத்துக் கொண்டுதான் சென்றோம். ஆனால் இவரை இந்த நிலையில் கண்டதும் தொண்டை அடைத்துக்கொண்டது; வாய் பேச மறுத்தது. பாதத்தைத் தொட்டு வணங்கினோம்.

கணீரென்ற தெளிவான குரலில் மிகப் பரிவுடன் எங்கள் க்ஷேம லாபங்களை விசாரித்தார் மகாத்மா. பதிலுக்கு ஏதோ குழறினோம். இவரைப் பேசவேண்டா மென்று வேண்டிக்கொண்டோம். சென்னை மாதர்கள் இவருக்காகப் பிரார்த்தனைகள் செய்து வருவதாகச் சொன்னோம். வந்தனம் தெரிவித்தார். இதற்குள் பேட்டிக்கு உரிய மூன்று நிமிஷங்கள் ஆகிவிட்டனவாம்.

அறையின் வெளியே வந்து அன்னை கஸ்தூரிபாவைத் தரிசித்தோம். அவர் முகத்திலும் அபூர்வமான சாந்தம். பொறுமையே உருக்கொண்டது போலத் தோன்றினர். அவரும் ஆர்வத்துடன் எங்கள் சுக துக்கங்களை விசாரித்தார். அவரையும் விட்டுப் பிரிய மனமில்லாமலே வந்து விட்டோம் வெளியே.

கஸ்தூரிபாவின் மாங்கல்ய பலமே காந்திக்கு இம்முறை புத்துயிர் அளித்தது என்பது எங்கள் அபிப்பிராயம்.

## கதவுகள் அடைபட்டன

ஆகாகான் அரண்மனை வாசலின் கனத்த கதவுகள் மார்ச்சு மாதம் 3-ம் தேதிமுதல் மறுபடியும் மூடிக் கொண்டன. மகாத்மா மறுபடியும் திரை மறைவிலே போய்விட்டார். நாங்கள் ஊர் வந்து சேர்ந்தோம்.

உடம்புதான் ஊருக்கு வந்து சேர்ந்தது : உள்ளத்தை அரண்மனை என்ற அந்தச் சிறைச்சாலைக்குள்ளே வைத்து விட்டுத்தான் திரும்பினேம்.

ஆகாகான் அரண்மனை : அந்தப் பெயரே தேச பக்தர்களைப் பரிகசிப்பது போல் இருக்கிறதல்லவா? காந்தி பக்தர்களுக்கெல்லாம் எவ்வளவு கலவரத்தையும் பயத்தையும் உண்டாக்கிய பெயர்! திடும் திடும் என்று பயங்கரமான செய்திகளை வெளியுலகத்திற்குக் கொடுத்து வந்த பெயர்!

## என்ன பெயர்! என்ன பலி!

மகாதேவ தேசாய்—மகாத்மாவின் வலது கரம்—இலக்கிய வீரர், கர்ம வீரர்—இந்தியாவின் விடுதலைப் போரின் முன்னணியிலே நின்ற தியாக வீரர்—இத்தகைய மகாதேவ் மறைந்தார் மண்ணுலகில் இருந்து. (1942-ம்

வருஷம், ஆக்ஸ்டு மாதம் 15-ந் தேதி) இந்தத் 'திடும்' செய்தியை வெளி உலகின் மேல் வீசி யெறிந்தது ஆகாகான் அரண்மனை.

மற்ருெரு நாள் மற்ருெரு வெடிகுண்டு வீசியது: மகாத்மாவின் 21-நாள்—உண்ணு விரதம் என்ற அந்த அதிர்ச்சியிலே தான் அந்த அரண்மனைக் கதவும் திறந்து விட்டது, காந்தி பக்தர்களுக்காக,—அந்தச் சம்பவம் சுபகரமாக முடியும் வரையில்.

அதன் பிறகு, 1944-ம் வருஷம் மார்ச்சு மாதம் பின்னும் துக்ககரமான செய்திகள்: "அன்னை கஸ்தூரிபா படுத்த படுக்கையாக இருக்கிருர்"—"ஹிருதய நோயால் பீடிக்கப் பெற்றிருக்கிருர்"—"அன்னை பிழைப்பது அரிது"—இத்தகைய அறிக்கைகள் வெளி வந்தன, அந்த அரண்மனையிலிருந்து.

எனினும் "அரண்மனை வாசல் திறக்கும்: அன்னை பிழைத்து விடுவார்!" என்று மனப்பால் குடித்தோம். அந்தப் பூதமோ அன்னையையும் அப்படியே விழுங்கி விட்டது! மகா சிவராத்திரி புண்ணிய தினமாகிய அந்த 22-ந் தேதி மாலை 7-35 மணிக்குக் கஸ்தூரிபாவின் ஆவி விடுதலை பெற்றது. மைந்தர் மகாதேவுடன் அன்னையும் அங்கே சமாதி பெற்ருர்.

## திறவாத கதவும் திறந்தது

"மகாத்மாவுக்கு மலேரியா!" இந்தக் கடைசிக் குண்டு சென்ற ஏப்ரல் கடைசியில் வெளிப்பட்டது. ஒரு முறை சூடு கண்ட குழந்தை என்ன செய்கிறது—தெரியுமா? நெருப்பு என்ருலே 'பூ! பூ!' என்று விரலை ஊதிக்கொண்டு அழத் தொடங்கிவிடுகிறது. பொது ஜன மனப்பான்மையும் அப்படித்தானே? எங்களுடைய மனநிலை—என்னவோ,—அதேமாதிரி இருந்தது.

"இந்த முறை மகாத்மா பிழைப்பது சாத்தியமில்லை." என்றே நினைக்கச் செய்துவிட்டது,—"தேக நிலை கவலைக்கு இடமாக இருக்கிறது" என்று அன்று மாலை ரேடியோ சொன்ன செய்தி. யாருக்குத் தான் நித்திரை வரும் அன்றிரவு!

ஆகாகான் அரண்மனை : அந்த வாசல் முன்னே கொந்தளிக்கும் அலைகடல் போல் ஜனக் கூட்டம்...... திசை இழந்த மரக்கலம் போலத் தத்தளிக்கிறது உள்ளம்...நாட்டின் மூலை முடுக்குகளில் அனுவசியமான கல்லடிகள், கலாட்டாக்கள், வேலை நிறுத்தங்கள்...... என்ன பயன்?

துரதிர்ஷ்ட இந்தியாவின் ஜாதகத்திலே ஒரு கடுகளவு சுகிர்த பலன் எங்கிருந்தோ முளைக்கிறது விடி வெள்ளி போலே. கெட்ட கனவுகளெல்லாம் உதய சூரியனைக் கண்ட பனிபோலப் பறந்துவிட்டன. இவ்வருஷம் மே மாதம் ஒரு நாள், திறவாத கதவும் திடீரென்று திறந்தது. வெளி உலகுக்கு வந்து விட்டார் நம் அருமை மகாத்மா. புகழுடல் தாங்கி அல்ல; பூத உடலும் தாங்கியே வந்துவிட்டார். 1942 ஆகஸ்டு 9-ந் தேதி அதிகாலையில் சிறை செய்யப் பெற்றவர், 1944 மே 6-ந் தேதி காலை 8 மணிக்கு விடுதலை பெற்றார்— என்பது உலகம் அறிந்த செய்தி.

"ஓம்" என்று மகாதேவ தேசாயின் சமாதி மீதும், "ஹே ராம்" என்று கஸ்தூரிபாவின் சமாதி மீதும் குழந்தை யுள்ளத்துடன் மகாத்மா சிறு கிளிஞ்சில்களைப் பதிய வைத்தாரே, அந்தச் சமாதிகளோடு கூடிய ஆகாகான் அரண்மனை,—காந்தியடிகளின் தபோ வனம்— காந்தி பக்தர்களுக்கு ஒரு புனித யாத்திரை ஸ்தலமாகி விட்டது; தவக் கோயிலாகிவிட்டது.

* * *

## அவரே புருஷோத்தமர்

"இப்பொழுது உலகத்திலே எவன் குணசாலி? வீரன் எவன்? எவன் தருமம் தெரிந்து தன் கடமையை உணர்ந்தவன்? சத்தியம் தவருதவன்? திட சங்கல்ப முடையவன்?" என்று வால்மீகி முனிவர் தம்முடைய காலத்திலே நாரத முனிவரைக் கேட்டாராம். அதற்கு அவர் விடையாக, "அவன்தான் ராமன்; அவனிடம் தான் இந்தக் குணங்கள் எல்லாம் ஒருங்கே அமைந்திருக்கின்றன. அவனே புருஷோத்தமன்" என்று கூறினாராம். அதன் பிறகே வனவாசம் செய்த ராமனையும், சிறை வாசம் செய்த சீதையையும் லட்சியமாக வைத்து வால்மீகி மகரிஷி ராமாயண கதையை எழுதினார் என்கிறார்கள்.

அந்தப் பழைய காலத்திலே வால்மீகி கேட்ட அதே பழைய கேள்வியை, இன்றும்—ஆம், இந்த யுத்த இருள் சூழ்ந்த தற்கால உலகத்திலும்—நாமும் கேட்டுப் பார்த்தால், ஒரு லட்சிய புருஷனைக் கண்டுகொள்ள முடியாதா? "ஆம், அவர்தான் நமது அன்னை கஸ்தூரி பாவுடன் ஆகாகான் அரண்மனையில் நமக்காகவும் நம்முடைய சந்ததிக்காகவும் தவஞ் செய்து விட்டுச் சமீபத்தில் நமக்கிடையே வந்து சேர்ந்தவர். அவரே புருஷோத்தமர்!" என்று காட்டுவதற்கு ஒரு நாரதரா வேண்டும்?

# சில கடிதங்கள்

I

ஸ்ரீ அம்புஜம்,

உன் கடிதமும் பழமும் வந்து விட்டன. பழம் இப்போது மிகவும் சரியான சமயத்திலேதான் வந்து சேர்ந்திருக்கிறது: ஏனென்றால் அது அத்யாவசியமா யிருந்தது. பம்பாயில் நல்ல ஆரஞ்சுகளும் முசம்பி ஆரஞ்சுகளும் எனக்குக் கிடைப்பதில்லை, நோயாளிகளுக் காகவும், அரை குறை நோயாளிகளுக்காகவும் அவை எனக்குத் தேவையாக இருக்கின்றன. ஆகவே அப்படிப் பட்ட முசம்பிப் பழங்களை இயன்ற போதெல்லாம் நீ எனக்கு அனுப்பி வைக்கலாம். கூடிய வரைக்கும் அந்தப் பழங்களின் விலை நயமாயிருக்கவேணும் என்று தானே நமது எண்ணம். நான் விலையைக் குறித்துக் கவனியாவிட்டால், ஏறக்குறைய எந்தப் பழமும் வாங்கிவிட முடியு மென்றே நினைக்கிறேன். ஆனால் அப்படித்தான் செய்யப்படாதே. நான் முசம்பிப் பழங்களைச் சாப்பிடத்தான் செய்தேன்: ஆனால் இரண்டு பழங்களுக்குமேல் சாப்பிடத் துணியவில்லை. என்னை விடத் தேவையானவர்கள் இருக்கிறார்களல்லவா?

இப்போது நான் இதற்குமேல் அதிகமாய் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை.

17-7-'37.
சேவாக் கிராமம்,
வர்தா.

அன்பு:

பாபு.

II

ஸ்ரீ அம்புஜம்,

உன்னுடைய இரண்டு கடிதங்களும் கிடைத்தன. அவகாசம் இல்லாத காரணமாகச் சிக்கிரம் பதில் கொடுக்க முடியவில்லை. உன்னுடைய ஞாபகமோ நித்தம் இருந்து கொண்டிருக்கிறது.

நீ ராமாயணம் படிப்பது ரொம்ப நல்ல காரியம். ஹரிஜன சேவை செய்துவருவதும் சரியானதே.

"பீஹார்"க் கஷ்டத்திற்காக ஏதாவது பணம் சேர்த்தாயா? தகப்பனார் ஏதாவது கொடுத்தாரா?

எனக்கு எழுதிக்கொண்டிரு. நான் எழுத்துக்களைத் தெளிவாக எழுத, என்னவோ, முயற்சி செய்கிறேன்.

2-2-'34. பாபுவின் ஆசீர்வாதம்

## III

அரக்கோணம்,
19-12-'32.

அன்புள்ள சகோதரி,

சென்னையில் தங்கிப் போகாமல் நேராகவே நான் பூனாவுக்குப் போவது குறித்துப் பெரிதும் வருந்துகிறேன். என்னை நீ மன்னிப்பாய் என்று நம்புகிறேன். திருவாங்கூருக்குப் போயிருக்கும் ஸ்ரீமதி ஊர்மிளா தேவி திரும்பிப் போகும்போது நிச்சயமாகச் சென்னையில் தங்கிப் போவார். அப்படிச் செய்வதாக என்னிடம் வாக்களித்திருக்கிறார்.

தெற்கே உள்ள சகோதரிகளும் சகோதரர்களும், இந்தத் தடவை நான் வந்திருந்ததை முன்னிட்டு எவ்வளவோ தயாளமாகவும் பட்சமாகவும் நடந்து கொண்டார்கள். அதற்கு நான் நன்றி பாராட்டுகிறேன். கடவுள் நமக்கெல்லாம் உதவுவாராக; ஜனங்களுக்குப் பணி செய்யும்படி நமக்கு ஆற்றல் அளிப்பாராக.

உண்மையுள்ள,

**கஸ்தூரிபா காந்தி.**

பின் குறிப்பு

தயவு செய்து இந்திய ஸ்திரீகள் சங்கத்தின் சகோதரிகளுக்கும் என்னுடைய வந்தனத்தைத் தெரிவிக்கவும்.

வர்தா, 26, செப்டம்பர், '36.

அன்புள்ள சகோதரி,

உன்னுடைய 23-ம் தேதிக் கடிதம் கிடைத்தது. இரண்டு கூடைப் பழங்களும் இன்று வந்து சேர்ந்தன. தென் இந்தியக் கிராமங்களைக் குறித்து நீ சொல்வது எனக்கு மிகவும் ருசிகரமாயிருக்கிறது. இடத்திற்கு இடம் கொஞ்சம் வித்தியாசம் இருக்கக் கூடியதுதான். ஒரு வேளை, கிராமங்களில் எல்லாம் வங்காளத்துக் கிராமங்களே மலேரியா மயம் என்று சொல்லலாம். ஆனால், சில தென்னிந்தியக் கிராமங்களில் மலேரியாவே கிடையாது என்று நீ சொல்லுகிறாயே, அது முற்றும் சரிதானா? மலேரியா நமது கிராம வாழ்வின் பிரிக்கமுடியாத அம்சமென்று ராஜாஜி என்னிடம் சொன்னாரே!

இச்சமயம் பாபுவுடன் சகோதரி ஒருவரும் இல்லை... பியாரி லாலும் கான் சாகிபும்தான் இப்போது இவருடன் இருக்கிறார்கள். வேறு இரண்டு தொண்டர்களும் இருக்கிறார்கள்: பெயரைச் சொன்னால் உனக்குத் தெரியாதே......

கான் சாகிபை நான் மறுபடியும் பார்க்கும்போது நீ விசாரித்ததாகச் சொல்லுகிறேன். பாபு இன்னும் பலவீனமாகவே யிருக்கிறார். நீங்கள் எல்லாரும் சௌக்கியம் என்று நம்புகிறேன்.

ஸ்ரீமதி அம்புஜம்மாள்,
அம்ஜத்பாக், லஸ்,
மயிலாப்பூர், மதராஸ்.

உண்மையுள்ள,

மகாதேவ்.

Printed at the Indian Express Press, Mount Road, Madras.

# தினமணி வெளியீடு

**பதிப்பாசிரியர்: பி. ஸ்ரீ.**

இந்தத் தலைப்பெயரோடு புதிய தமிழ்ப் புஸ்தகங்கள் அழகான பதிப்புகளாய்ச் சித்திர சகிதமாய் வெளிவரும். ஜீவிய சரித்திரம், சரித்திரம், யாத்திரை, சிறுகதை, நாவல், நாடகம், விஞ்ஞான சாஸ்திரம் முதலிய பல வேறு துறைகளில் பல ஆசிரியர்கள் எழுதுவார்கள். தமிழ் மக்களுக்குத் தமிழிலே தற்கால அறிவுச் செல்வத்தை வழங்குவதற்காகவும், தமிழ் வளர்ச்சிக்குப் பல வகையிலும் தொண்டு புரிவதற்காகவும், இந்த வரிசையில் வெளியிட உத்தேசித்திருக்கும் சில புஸ்தகங்கள்.

| | பக்கம் |
|---|---|
| **ரவீந்திர நாத டாகூர்**—கே. சந்திரசேகரன், எம். ஏ., எம். எல். | 96 |
| **கைலாஸம் - மானஸரோவர்** — அருமையான யாத்திரைப் புஸ்தகம். ஸ்ரீ. எஸ் வேதாந்தம் ... | ... 96 |
| **ஹாஸ்ய நாடகங்கள், கட்டுரைகள்**— ஸ்ரீ. வி. ஸி. கோபாலரத்தினம், பி. ஏ., பி. எல். | ... |
| **போலந்து-பின்லாந்து**—ஸ்ரீ. டி. கிருஷ்ண மூர்த்தி | ... |
| **சிறு கதைகள்**—ஸ்ரீ. எஸ். வையாபுரிப் பிள்ளை, தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர், சென்னை யூனிவர்ஸிடி. பி. ஸ்ரீ. தொகுத்தது ... ... | ... |
| **கஸ்தூரிபா காந்தி**—ஸ்ரீமதி ஆர். எஸ். ருக்மிணி, பி. ஏ. | ... |
| **கட்டுரைகள், கதைகள், நாடகங்கள்**—பி. ஸ்ரீ. ... | ... |
| **மௌலானா அபுல் கலாம் ஆஜாத்**—ஸ்ரீ எம். எம். இஸ்மாயில். | ... |
| **ஐசுவரிய அமெரிக்கா**—ஸ்ரீ வி. மகாலிங்கம், எம். ஏ. | ... |
| **தில்லக் கோவிந்தன்**—ஸ்ரீ அ. மாதவையா எழுதிய ஆங்கில நாவலின் மொழிபெயர்ப்பு: மொழிபெயர்த்தவர் ஸ்ரீ வி. நாராயணன், எம். ஏ., எம். எல். ... | ... |
| **கல்யாண கலாட்டா முதலியன**—டி. எஸ். வரதன் எம். ஏ. | ... |
| **ருஷியாவும் நாமும்**—ஸ்ரீ வி. எஸ். என். ... | ... |

**மானேஜர், "தினமணி" புஸ்தக இலாகா.**